# கல்கி

KALKI
1.7.2007 ரூ.8.00
80 பக்கங்கள்

குடும்பத்துடன் படிக்க...




# மகா'பாவ'புரம்?

உள்ளத்தை உறைய வைக்கும் வேதனை

உங்கள் அனைவரின் ஒருமித்த கருத்து...

'கல்கி' வாசகர்களின்
பெரும்பான்மை வோட்டு...

தலைமுறை தலைமுறையாக
நீங்கள் ரசித்த எழுத்து... இன்றைய
இளைஞர்களுக்கும் அந்த அரிய வாய்ப்பு...

அடடே! கல்கி வாசகர்கள்
இதற்குள் யூகித்திருப்பீர்களே!

# நீங்கள் கேட்டதை
# நாங்கள் தருகிறோம்!

கல்கி ஆகஸ்ட் 05
ஆண்டு மலர்
இதழிலிருந்து...

இன்னும் விவரங்களுக்கு ஜஸ்ட் ஒரு வாரம் வெயிட் பண்ணுங்க...

## ஸ்பீடு போஸ்ட்

'**கா**தலைத் தட்டும் காஸ்' கட்டுரை பயனுள்ளதாக இருந்தது. மக்களின் அன்றாடப் பிரச்னைகளை அலசி, அதற்கான தீர்வைக் கூறும் கல்கிக்கு நன்றி.

**- கோமளா ரங்கநாதன், சென்னை**

**கா**க்கைகளைப் (படம்) பிடித்து கவிதையாக்கி வெளியிட்டது யாரைக் காக்காய் பிடிக்க? அதுசரி, திருமண வீடு, கருமாதி வீடு என்று பேதமறியாது எச்சிலைக்கு ஏங்கித் தவித்தபடி சில காக்கைகள்... எந்தச் சில காக்கைகள்...?

**- தெ.சு.ரா.மூர்த்தி, கூத்தப்பாக்கம்**

'**தி**த்திக்கும் திங்கள்' - யாருடைய சிந்தனையிலும் இதுவரை உதிக்காத புதுமை முயற்சி. நெஞ்சில் சுமக்கும் கல்கியை, இனி நாங்கள் கையிலும் சுமக்க வேண்டுமா..? சரி... சுகமான சுமைதானே!

**- எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்**

**அ**சல் புரட்சித் தலைவி சூகிதான். புயலை வீட்டுக்குள் எவ்வளவு காலம்தான் அடைத்து வைக்க முடியும்? இந்தப் புயல் பர்மிய தேசத்தை ஆளத்தான் போகிறது!

**- பி.கர்ஷினி, குடந்தை**

**அ**லர்ஜியைக் கட்டுப்படுத்தினால் சைனஸ் கிட்டே வராது என்று நம்பிக்கை கொடுத்து விட்டீர்கள்!

**- லெமூரியன், திருவண்ணாமலை**

'**ஒ**ரு தேவதை பூதமாகிறாள்...!' கவிதைக்கான ஓவியமும் உயிரோட்டமான வரிகளும் மனதைத் தொட்டன.

**- எஸ்.எம்.பாலசுப்ரமணியன், போடிநாயக்கனூர்**




**த**யிர் சாதம் என்னதான் அருமையான தயாரிப்பாக இருந்தாலும் அன்றே சமைத்து அன்றே சாப்பிடப்படும் உணவுக்கு சமமானது அல்ல. மாறி வரும் வாழ்க்கையில் சௌக்கியத்தை விலையாகக் கொடுத்து பணத்தைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறோம்.

**- ரொசாரியோ ரவிச்சந்திரன், சென்னை**

**ந**ம் முன்னோர் கட்டிய வீட்டை இடித்துவிட்டு

# உம்மை கிரிக்கெட் பேட்டால

புதிய வீடு கட்டுவதில்லையா... அது போல் இராமர் பாலம் இயற்கையானதாக இருந்தாலும் காலத்துக்கு ஏற்றவாறு அதை ஆழப்படுத்தி கப்பல் போக்குவரத்து நடத்துவது தவறல்ல!

- உமரி.பொ.கணேசன், மும்பை

**ம**ன்னார்குடி பாலகுமாரனை நம் எல்லாருக்கும் தெரியும். இப்ப திருவையாறு பாலகுமார்ங்கிறவரை தெரிஞ்சுக்கிட்டோம். அவருடைய 'பறவை மொழி' மூலம்!

- குவளை எழில், சென்னை

**யோ**வ் மதனராஜா... வர வர உன் சேட்டை தாங்க முடியல. காதல் தோல்விக்கு என்ன காரணும்னு சொல்றத விட்டுப்புட்டு, ஹெல்மட்டை வச்சு லிஸ்ட்டு போட்டிருக்கற உம்மையெல்லாம் கிரிக்கெட் பேட்டாலயே அடிக்கணும்!

- நீ.முத்துக்குமார், திருச்சி

'**நி**னைத்து நினைத்துப் பார்த்தேன்' ஒரு அபத்தமான படம். கண்டித்து விமர்சிப்பதற்குப் பதிலாக 'நம்பிக்கை தர்றார்' என்று முதுகில் தட்டிக் கொடுக்காதீங்க லஜ்ஜாவதி!

- மயிலாடுதுறை, இரா.இராஜேந்திரன்

**தா**ங்கள் நடத்திய வாசகர் கருத்துக் கணிப்பில் பங்கேற்று, அதிலும் முதல் 50 வாசகர்களில் நானும் ஒருவன் என்பதையறிந்து பெருமிதமும், மகிழ்ச்சியும் கொண்டேன். அதற்குரிய பரிசுப் புத்தகங்களையும் அனுப்பி உள்ளீர்கள். அதை நன்றியுடன் பெற்றுக் கொண்டேன். மேலும் தாங்கள் வாசகர்கள் மீது வைத்துள்ள அன்பையும் மதிப்பையும் நன்கு உணர்ந்தேன்.

-கே.மோகனசுந்தரம், பாளையங்கோட்டை

# அடிக்கணும்!




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன், எம். மோகன்,
ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



சர்வதேச போலீஸிடமிருந்து காவல் துறைத் தலைவர் மூலமாக வந்த அந்தத் தகவல் மாமல்லபுரம் போலீஸ் ஸ்டேஷனை அதிர்ச்சிக்குள்ளாக்குகிறது. 'அமெரிக்க போலீஸுக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு, எஸ்கேப் ஆன பரோல் கைதி ரப்பி ஆலன் ஜாய் ஹெரோவிட் மாமல்லபுரத்தில் தலைமறைவாகத் தங்கியிருக்கிறான்' என்பதுதான் அந்தத் தகவல். நியூயார்க் போலீஸ் தேடி வரும் 100 நபர்களில் ஒருவன் ஹெரோவிட். தகவல் வந்த கடந்த மே மாதம் இருபத்திரண்டாம் தேதி, அதிரடியாக ஊரில் உள்ள எல்லா தங்கும் விடுதிகளையும் அலசுகிறார்கள் இன்ஸ்பெக்டர் குணசேகரனும் சப்இன்ஸ்பெக்டர் சந்திரசேகரனும். போலீஸ் வலை இறுகுவதை மோப்பம் பிடித்த ஹெரோவிட் விட்டான் ஜூட். ஆனால் விடவில்லை போலீஸ்... பெருமுயற்சிக்குப் பிறகு மடக்கிப் பிடிக்கப்பட்ட ஹெரோவிட், இப்போது புழல் சிறையில் கம்பி எண்ணிக் கொண்டிருக்கிறான்.

யார் இந்த ஹெரோவிட்? இந்த அறுபது வயது அமெரிக்க டாக்டர் ஒரு paedophile. தங்களது வக்ர பாலியல் நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்ள சிறுவர், சிறுமியரைத் தொடர்ந்து பயன்படுத்தும் மனித மிருகங்களை paedophile என்று சொல்வார்கள். இது போன்ற குற்றங்களுக்காக அமெரிக்காவில் 20 ஆண்டுகள் சிறை தண்டனை பெற்றவன் ஹெரோவிட். 2004ல் பரோலில் வந்தவன், போலி பாஸ்போர்ட்டில் தப்பி, உலகமெங்கும் சுற்றி, பின்னர் மாமல்லபுரத்தில் வந்து தங்கி, தனது கொடுமைகளைத் தொடர்ந்திருக்கிறான். சர்வதேச போலீஸின் எச்சரிக்கையைத் தொடர்ந்து அமெரிக்கத் தூதரக உதவியுடன் மாமல்லபுரம் போலீஸ் ஹெரோவிட்டை வளைத்துவிட்டது.

ஹெரோவிட் கைதைத் தொடர்ந்து 'சிறுவர், சிறுமியர் மீது பாலியல் கொடுமைகள் நடக்கும் முக்கிய மையமாக மாமல்லபுரம் இருக்கிறது' என்ற பேச்சு மீண்டும் அடிபடத் துவங்கிவிட்டது. இந்தப் பேச்சுகளில் எந்த அளவுக்கு உண்மை இருக்கிறது என்பதைக் கண்டறிய நேரடியாக மாமல்லபுரம் சென்றோம். மண்டையைப் பிளக்கும் வெயிலில் மாமல்லபுரம் கடற்கரை பக்கம் நடந்தோம்.

ஏகப்பட்ட குட்டிக்குட்டி ரெஸ்டாரெண்ட்டுகள், சிற்பக் கூடங்கள், சங்கு, சோழி, மணிக் கடைகள். நமக்கு முன்னால் இரண்டு வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகள் போய்க் கொண்டிருக்க, ஃபோட்டோ கார்டு விற்கும் சிறுமி ஒருத்தி 'ஸார் ஸார்' என்று அவர்களைத் துரத்திக் கொண்டிருந்தாள். ஆனால் அவர்கள் அந்தச் சிறுமியைக் கண்டுகொள்ளவே இல்லை. சலித்துப் போன சிறுமியை கடை நிழலில் ஒரங்கட்டி, ''அவங்க ஏதும் வாங்கலையா?'' என்று மெள்ள பேச்சுக் கொடுத்தோம். ''இந்த வெள்

# மகா 'பாவ'

ளைக்காரங்ககூட நல்லா பேசிப் பழகுவியா?'' என்றால், ''கெஞ்சி, கெஞ்சி விற்க வேண்டியிருக்கு. அவங்ககூட கையெல்லாம் பிடிச்சுட்டுப் போகக் கூடாதுன்னு அம்மா சொல்லியிருக்காங்க. ஆனா, இந்தப் பசங்களோட தொல்லை தான் தாங்க முடியலை'' என்று அங்கிருந்த சோழி, சங்கு விற்கும் சில சிறுவர்களைக் காட்டினாள்.

அப்படியே ஐந்து ரதம் பகுதிக்கு வந்து, வழியில் சுற்றுலா வழிகாட்டி ஒருவரைச் சந்தித்தோம். கிட்டத்தட்ட முப்பது வருடங்களாக மாமல்லபுரத்துக்கு வரும் உள்நாட்டு, வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகளுடன் பழகிக் கொண் டிருப்பவர்.

''நீங்க சொல்வதுபோல சிறுவர், சிறுமியர் மீது பாலியல் கொடுமைகள் இங்கே நடப்பது உண்மைதான். மொபைல் ஆக நடந்து கொண்டு விற்கும் சிறுவர்களை விட, கடையில் வேலை செய்யும் சிறுவர்களே சிதைக்கப்படுகிறார்கள் என்றுதான் கேள் விப்பட்டேன். பௌர்ணமிக்கு முன்னும் பின்னும் மொத்தம் மூன்று நாட்கள், வெளிநாட்டவர்கள் இங்கு தங்கியிருக்க விரும்புகிறார்கள். அப்போது இரவில், கடற்பகுதியில் 'சில' சட்ட விரோத காரியங்கள் நடக்கின்றன. அவற்றில் பாலியல் கொடுமையும் ஒன்று.

இதில் உள்ளூர்ச் சுற்றுலாப் பயணிகளும் அடக்கம். சென்னையிலிருந்து வரும்போது மாமல்ல புரத்துக்குச் சாலை பிரியும் இடம் 'ஏற்பாடு' சந்திப்பு களுக்கு ஏற்ற இடமாக இருக்கிறது என்று சொல்கிறார்கள்'' என்றார் அந்த கைடு.

மொபைல் ஆக நடந்து கொண்டு விற்கும் சிறுவர்களைவிட, கடையில் வேலை செய்யும் சிறுவர்களே சிதைக்கப் படுகிறார்கள்!

பொதுவாக மாமல்லபுரத்தில் பலரிடம் பேசியதி லிருந்து சிறுவர், சிறுமியர் மீது பாலியல் கொடுமைகள் நடப்பது இலைமறைக் காயாகத் தெரிய வருகிறது. ஆனால், ''அந்தக் கருத்து சரியல்ல'' என்கிறார் மாமல்லபுரம் சரகக் காவல் துணைக் கண்காணிப்பாளர் சௌந்தர்ராஜன்.

புரம்?



"எப்போதோ அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில சம்பவங்கள் நடந்திருக்கலாம். ஆனால் இப்போது நாங்கள் தீவிர கண்காணிப்பில் ஈடுபட்டிருக்கிறோம். சிறுவர், சிறுமியர் வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளுடன் அவர்கள் தங்கியிருக்கும் இடங்களுக்குச் செல்வதை அனுமதிக்கக் கூடாது என்று விடுதி மற்றும் ரிசார்ட் நிர்வாகிகளுக்குக் கண்டிப்பாகச் சொல்லியிருக்கிறோம். கடற்கரையோர கிராமங்களுக்குச் சென்று பெற்றோர்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்துகிறோம். ஒரு நெதர்லாந்துக்காரரைப் பிடித்து உள்ளே போட்டிருக்கிறோம். வறுமையின் காரணமாக முன்பு சில பெற்றோர்கள், இதுபோன்ற பாலியல் ஆசைகளுக்குத் தீனிபோட தங்கள் குழந்தைகளை அனுப்பியிருக்கக்கூடும். ஆனால் இப்போது நிலைமை மாறிவிட்டது" என்கிறார் சௌந்தர்ராஜன்.

**சமூக நலத்துறை அமைச்சர் வந்தும் ஒன்றும் நடக்கவில்லை!**

இவருடைய கருத்து இப்படியிருக்க, "பிஞ்சு உள்ளங்களில் பெரிய பாதிப்பை உண்டாக்கும் பாலியல் கொடுமைகள் தொடர்ந்து இங்கு நடந்து கொண்டுதான் இருக்கின்றன" என்று அடித்துச் சொல்கிறார் மாமல்லபுரம் நகர முக்கியப் பிரமுகர் ஒருவர்.

"சுற்றுலாத் தலமான இங்கும் சுற்றுவட்டாரத்திலும் 46 அனாதைக் குழந்தை இல்லங்கள் இருக்கின்றன. வேறெந்த ஊரிலும் இதுபோன்று அதிக எண்ணிக்கையில் கண்டதுண்டா? பெரும்பாலான இல்லங்கள் அரசு அனுமதி பெறாதவை. இங்கு வரும் வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளிடம் குழந்தைகளைக் காட்டி நன்கொடை வாங்கப்படுகிறது. அதிக நன்கொடை பெறும் ஆசையில், வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளின் பாலியல் வக்ரங்களுக்கு அனாதை இல்ல சிறுவர், சிறுமியர் பயன்படுத்தப்படுகிறார்கள். மலரினும் மெல்லிய உணர்வுகள் ரணமாக்கப்படுகின்றன.

சமூகநலத் துறை அமைச்சர் பூங்கோதை ஒரு முறை இங்கு வந்தபோது 'அங்கீகாரம் பெறாத இல்லங்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படும்' என்றார். ஆனால், ஒன்றும் நடக்கவில்லை. அவ்வப்போது மதத்தைப் பின்புலமாகக் கொண்டவர்கள் அனாதை இல்லம் துவங்குகிறார்கள். இந்த நிலை தொடர்ந்தால் மாமல்லபுரம், விரைவில் மகா'பாவ'புரமாக மாறிவிடும். ஒன்றுமறியா இளம் தளிர்களின் வாழ்க்கையும் சிதறிப்

## விழிப்புணர்வை ஊட்டுங்கள்!

இது குறித்து துளிர் என்னும் குழந்தைகளுக்கான தன்னார்வ அமைப்பின் நிர்வாக இயக்குநர் வித்யா ரெட்டியிடம் பேசினோம்.

"மூன்று முதல் பதினெட்டு வயதுக்குட்பட்டோரில் 15 சதவிகிதம் பேர் பாலியல் கொடுமைக்கு ஆளாகி இருப்பதாக ஒரு புள்ளி விவரம் சொல்கிறது. பாதிக்கப்பட்ட குழந்தைகள் பயம் காரணமாக மௌனமாக இருந்து விடுகிறார்கள் அல்லது தங்களுக்கு என்ன நடந்தது என்று சொல்லத் தெரியாத நிலை. அப்படியே குழந்தைகள் சொன்னாலும், அவமானம் காரணமாக பெற்றோர்கள் விவகாரத்தை மனதில் புதைத்துக் கொண்டு விடுகிறார்கள். ஆக, பதிவாகாத அல்லது புகார் செய்யப்படாத குற்றங்கள் ஏராளம். எனவே நாம் குழந்தைகளிடம் விழிப்புணர்வை ஊட்ட வேண்டும்" என்கிறார் வித்யாரெட்டி.

"பெற்றோர்கள் குழந்தைகளைத் தொடர்ந்து கவனித்து வரவேண்டும். அவர்

போகும்'' என்று கவலையுடன் சொல்கிறார் அந்தப் பிரமுகர்.

தங்கும் விடுதிகளை நடத்துபவர்கள், தங்கள் வியாபாரம் பாதிக்கப்படக் கூடாது என்ற சுயநலத்தில், காவல்துறையைத் தக்க விதத்தில் 'கண்டு' கொண்டு கொடுமைகள் தொடர அனுமதிக்கிறார்கள் என்றும் குற்றச் சாட்டு வைக்கப்படுகிறது.

பூரி ஜகன்னாதர் கோயில் அருகே உள்ள ஒரு கடற்கரை கிராமம் இத்தகைய 'பாவ புரமாக' மாறிவிட்டதை ஒரிஸ்ஸா அரசே ஒப்புக்கொண்டிருக்கிறது! அதுபோன்ற நிலை மாமல்லபுரத்தில் வந்துவிடக்கூடாது. காவல் துறை இன்னமும் விழிப்புடன் செயல்பட வேண்டும் என்பதே நமது வேண்டுகோள். இது தவிர, புற்றீசல் போல துவக்கப்பட்டு நடத்தப்படும் அனாதை இல்லங்களில் என்ன நடக்கிறது? அவற்றின் நிதி ஆதாரங்கள் என்ன? அவை எந்த அமைப்புக்குக் கட்டுப்பட்டு நடக்கின்றன? வெளிநாட்டு நன்கொடை யாருக்கு, எவ்வளவு வருகிறது? போன்ற கேள்விகளுக்கெல்லாம் தக்க பதில் வைத்துக்கொள்ளும் பொறுப்பு மாநில அரசுக்கு இருக்கிறது. காவல்துறை சமூகப் பொறுப்புடன் தொன்மைமிக்க மாமல்லபுரத்தைக் கட்டுப்பாட்டுடன் கண்காணிக்காவிட்டால் மகா'பாவ'புரம் என்ற பெயர் நிலைத்து விடும்.

- ப்ரியன்

களைப் பேசவிட்டுக் கேட்க வேண்டும். சந்தேகங்களுக்குச் சரிவர விளக்கங்கள் கொடுக்க வேண்டும். சிறிய மாற்றங்களைக்கூட கண்டுபிடித்து விசாரிக்க வேண்டும். குழந்தை பாலியல் கொடுமைகள் குறித்த செய்திகளில் பரபரப்பைக் குறைத்து, விழிப்புணர்வை ஊட்ட வேண்டியது மீடியாவின் கடமை'' என்கிறார் துளிர் அமைப்பின் திட்ட அலுவலரான நான்ஸி.

இது குறித்து குழந்தைகளுக்கு அறிவுறுத்த, முறையான, அச்சமூட்டாத விளக்கத் திட்டத்தைத் துளிர் உருவாக்கியிருக்கிறது.

# பிரதிபா பாட்டீல்



* மயக்க மொழி!



* அரை குறை மருந்து!



* செல்வாக்கு வளர்ந்தால்...

1.அ.யாழினி பர்வதம், சென்னை - 78

? நடிகைகளைப் போல், நடிகர்களின் திருமணமும் பிரச்னையாகிறதே, ஏன்?

! விவாகரத்துக் கேட்டு நீதிமன்றத்தில் நுழையும் மனிதர்களின் எண்ணிக்கை ஒவ்வொரு நாளும் அதிகரித்துக்கொண்டே போகிறது. அதில் பிரபலங்களின் மீது கேமராக்கள் பளிச்சென்று பதிகின்றன - அவ்வளவுதான்!

2.வே.ந.கதிர்வேல், வேலூர்

? 'பெண்களுக்கான இட ஒதுக்கீட்டுக்கு, நம்பிக்கை அளிக்கக்கூடிய தொடக்கம் பிரதிபா பாட்டீல் நியமனம். ஆத்திக மொழியில் சொல்வதென்றால் பிள்ளையார் சுழி'என கருணாநிதி மகிழ்ச்சி தெரிவித்துள்ளாரே?

! பெண்களுக்கான இட ஒதுக்கீடு செய்வதெனில், அதை இன்றைய மத்திய அரசு இதற்குள் செய்து முடித்திருக்கலாமே! பிள்ளையார் சுழி இப்போது போடுவதெனில், குடியரசுத் தலைவருக்கான வேட்பாளரைப் பற்றி யோசிக்கும்போதே பிரதிபா பாட்டீலின் ஞாபகம் முதலில் அல்லவா இவர்களுக்கு வந்திருக்க வேண்டும்! பிரதிபா ஜோக் அல்ல; பிரதிபா வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட விதம்தான் ஜோக்.



* 'பளிச்'...

3.லலிதா செல்லப்பா, பம்மல்

? இந்தக் கேள்வி உங்கள் கையில் கிடைக்கிறபோது ரஜினியின் 'சிவாஜி' பார்த்திருப்பீர்கள். இப்போ சொல்லுங்க, சிவாஜி சாதனைப் படமா அல்லது வேதனைப் படமா?

! மீடியாவில் முன்னெப்போதும் இல்லாத பரபரப்பை ஏற்படுத்தியதில் சாதனை. செலவு ஒரு சாதனை. வசூலில் வெற்றி பெற்றால் இன்னொரு சாதனை. ஆனால், இத் திரைப்படம் மூலம் சமுதாயத்தில் என்ன பாதிப்பு ஏற்பட்டுள்ளது என்று பார்த்தால் வேதனை தராவிட்டாலும் ஏமாற்றமே மிஞ்சும்.

4. எச்.ஆன்டனி தமிழரசன், மும்பை - 17

? இந்திய கிரிக்கெட் அணிக்குப் பயிற்சி

# நியமனம் பிள்ளையார் சுழியாமே...?

## ஞாநி

*அளிக்க, தென் ஆப்பிரிக்காவைச் சேர்ந்த கிரகாம் ஃபோர்ட் மறுத்துவிட்டாரே?*

! ஃபோர்டுக்குப் பிறகு எம்பூரேயும் கைவிரித்துவிட்டார். கோச் பொறுப்பில் பணியாற்றுவோருக்குப் பணம் தந்தால் போதாது. சில ஆண்டுகளுக்கேனும் பணி நிரந்தரம் வேண்டும். அதிகாரங்களும், அவற்றைச் செயலாக்கச் சுதந்திரமும் அளிக்கப்படுவதும் அவசியம். மூக்கணாங் கயிறுடன் இயங்க எந்த முதல்தரக் கோச்சும் முன்வர மாட்டார்.

5.ஜெ.மகேஸ்வரி, மதுரை - 14

*? கோயில்களில் தேவாரம் பாட ஹைகோர்ட் இடைக்காலத் தடை விதித்துள்ளது பற்றி..?*

! ஒட்டுமொத்தமாக அனைத்துக் கோயில்களிலும் அல்ல; சிதம்பரம் கோயிலில் மட்டுமே. இங்கே தீக்ஷிதர்களுக்குச் சில சிறப்பு அதிகாரங்கள் தொன்றுதொட்டு இருந்து வருகின்றன. காலப்போக்கில் படிப்படியாக மாற்றங்கள் ஏற்படும்.

6.ராஜிராதா, திருச்சி - 14 ★

*? மாவோயிஸ்டுகளும் நக்ஸலைட்டுகளும் இந்த நாட்டுக்குத் தேவையா?*

! தேவையே இல்லைதான். ஆனால், அத்தகைய வன்முறை இயக்கங்கள் தேவை என்ற கருத்து உருவாகக் காரணமாயிருந்த - இருக்கிற - அரசியல்வாதிகள் தேவையா என்ற கேள்வியும் எழுகிறது அல்லவா?

7.ஜி.குப்புசாமி, சென்னை - 24

*? நடிகர் கார்த்திக்கின் ஃபார்வர்ட் பிளாக் கட்சி என்ன ஆயிற்று?*

! ஃபார்வர்டில் முன்னேற முடியாமல் பிளாக் ஆகியிருக்கிறது.

## நீங்கள் கேட்டவை

8.வி.பெரியசாமி, அரியலூர்

*? கனிமொழியின் வளர்ச்சி எந்தக் கட்சிக்காவது பாதகமாக அமையுமா?*

! தி.மு.க.வில் அவர் வளர்ச்சி, மற்ற கட்சிகளுக்குப் பாதகமாகிவிடாது; ஆனால், மக்களிடையே (தயாநிதி போல) அவரு



★ ... பதிவுகள்!

**வாசக தராசுகளே!**

இவ்வார பதில்களுள் 'பளிச்' எது? அஞ்சலட்டையில் அதன் எண்ணைக் குறிப்பிட்டு வாக்களித்து, 30.6.07 தேதிக்குள் கிடைக்கும்படி எங்களுக்கு அனுப்புங்கள். முகவரி பகுதியில் 'வாசக தராசு - 1.7.07' என்று தவறாமல் எழுதுங்கள். மெஜாரிட்டி பெறும் பதிலைத் தேர்வு செய்தோருள் ஒருவருக்கு, குலுக்கல் முறையில் ரூ.100/- பரிசு (ஆசிரியர் தீர்ப்பே இறுதி).

10.6.07 இதழில் இடம்பெற்ற 'வாசக தராசு' போட்டியில் பரிசு பெறும் பதில் எண் : 10. பரிசு பெறும் வாசகர்: அ.ச.நாராயணன், பாளையங்கோட்டை, திருநெல்வேலி

டைய செல்வாக்கு வளர்ந்தால் மற்ற கட்சிகளுக்குப் பாதகம் தான்!

9.சு.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்

? ரௌடிகளுடன் கூட்டு வைத்துள்ள சென்னை போலீஸாரை இடம் மாற்ற வேண்டும் என்று ராமதாஸ் கூறியுள்ளாரே?

! ரௌடிகளுடன் கூட்டு வைத்துள்ள அரசியல்வாதிகளை எங்கே, எப்படி இடம் மாற்றுவது? நோய்க்கு மருந்து கொடுங்கள் டாக்டர்; நோயின் அறிகுறிக்கு அல்ல!



* முட்டுக்கட்டை

10.இரா.இராஜேந்திரன், மயிலாடுதுறை

? என்ன ஸார், குழப்பறீங்க..? தலைக் கவசம் (ஹெல்மெட்) அணியணுமா, வேண்டாமா? - பளிச்சுனு சொல்லுங்க...

! அணியணும். வேண்டாம்னா பஸ்லிலேயா, ரயிலிலேயா போகணும். 'பளிச் பளிச்' பதில் எப்படி!



* பித்தம் ஏமாற்றும்!

11.கே.எஸ்.கோவர்த்தனன்,
சென்னை - 42

? புழல் மத்திய சிறை வளாகத்தின் சுற்றுச் சுவர்களில் அரசியல் கட்சிகள் முதல் அனைத்துத் தரப்பினரின் போஸ்டர்களும் ஒட்டப்பட்டு அலங்கோலமாகக் காட்சி அளிக்கிறதே..?

! வெளியில்தானே; நல்ல வேளை!

12.என்.சண்முகம், சேலம் - 1

? மகாத்மா காந்தி பிறந்த தினமான அக்டோபர் 2-ஆம் தேதியை, சர்வதேச வன்முறையற்ற (அஹிம்சை) தினமாகக் கடைபிடிக்க ஐ.நா.சபை முடிவு செய்துள்ளது பற்றி...

! அப்பாடா! காந்தியையும் காந்தியத்தையும் இனிமேல் அடியோடு மறந்துவிடலாம் என்று யாராவது மனப்பால் குடித்தால் நடக்காது. காந்தியத்தை உலகம் ஒதுக்கினாலும் காந்தியம் உலக மக்களை வெறுக்காது. அது என்றென்றும் நமக்கு வழிகாட்டியாக விளங்கி, கடமையாற்றிக் கொண்டேதான் இருக்கும். ●

□ ரூ.100/- பரிசு பெறுபவர்:
லலிதா செல்லப்பா, பம்மல், சென்னை

* ரூ.50/- பரிசு பெறுபவர்:
ராஜிராதா, திருச்சி - 14

ஃபோர்டு என்றால் நமக்கு அது ஒரு கம்பீரமான கார். சாலையில் வழுக்கிக்கொண்டு செல்லும் பளபளப்பான வாகனம். இந்திய கிரிக்கெட் அணியும் இப்படியொரு சொகுசை எதிர்பார்த்துத்தான் ஃபோர்டு என்கிற குருவி தலையில் பனங்காயை வைத்தது. புத்திசாலி குருவி. பனங்காயைத் தட்டிவிட்டுப் பறந்துவிட்டது. ஆயிரம் அலம்பல்கள் பண்ணினாலும் தியாவுக்கு சைகை காண்பித்தார். இப்போது நினைத்துப் பார்க்கும்போது அவர் மிகவும் கீழிறங்கி விட்டாரோ என்று பலரும் எண்ணுகிறார்கள். இந்தியா மீது இருந்த பிடிப்பே அவருடைய பலவீனமாகிவிட்டது.

2005ல் ரவி சாஸ்திரி ஆசைப்பட்ட க்ரேக் சேப்பலுக்குத்தான் கோச் பதவி அளிக்கப்பட்டது. இப்போதும் ஃபோர்டு பெயரை

# சண்டிக் குதிரை... நொண்டிச் சாரதி!

பி.சி.சி.ஐ. யின் ஆயுட்கால உழைப்பு, ஏற்பாடுகளெல்லாம் தூள் தூளாகிப் போனதற்காக சில நிமிடங்கள் அனுதாபம் தெரிவிக்கலாம்.

உலகக் கோப்பை முடிந்து எல்லா நாடுகளிலும் மும்முரமாகக் கோச் மாற்றங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. 'போதுமடா சாமி' என்று க்ரேக் சேப்பல் இந்திய அணிக்கு வணக்கம் போட்டது முதல் பி.சி.சி.ஐ. ஒரு பரபரப்புக் கேந்திரமானது. உலகக் கோப்பை பாதி நடந்து கொண்டிருக்கும்போதே பங்களாதேஷ் கோச்சான வாட்மோர் பங்களாதேஷ் பெவிலினியனில் இருந்துகொண்டு இந்



* பி.சி.சி.ஐ. தலைவர் சரத்பவார்

முதலில் பரிந்துரைத்தது ரவிசாஸ்திரிதான். தான் பயிற்சியாளராக இருந்தபோது தென் ஆப்பிரிக்கா அணியை ஆஸ்திரேலியாவுக்கு மிக நெருக்கமாகக் கொண்டு சேர்த்தவர் ஃபோர்டு. இவர் அணியின் வீரர்களைத் தன் இமையில் வைத்துக் காப்பார். நட்டாற்றில் தவிக்கும் இந்திய அணியைக் கரை சேர்ப்பார் என்று ஆசைப்பட்டதெல்லாம் பொசுங்கிப் போய்விட்டது.

இங்கிலாந்து டூருக்குப் பிறகு புதிய பயிற்சியாளர் தேர்வு செய்யப்படுகிறார். ஒரு கோச்சினுடைய பொறுப்புகள் பலத் தரப்பட்டவை. புரியாத

**சீனியர் வீரர்கள் மைதானத்தில் ஆதிக்கம் செலுத்துகிறார்களோ இல்லையோ, மைதானத்துக்கு வெளியே அவர்கள் சொல்வதுதான் வேதம்.**

நிறைய பொறுப்புகளும் உண்டு. ஆனால் இந்திய அணி வெற்றிகளைக் குவிக்க வலுவான ஒரு பிரகஸ்பதி அவசியம் என்கிற எண்ணமே இல்லாமல் நடந்துகொள்கிறது பி.சி.சி.ஐ. கிரஹாம் ஃபோர்டினால் உண்டான தலைவலிகள் தீர அவகாசம் எடுத்துக்கொள்கிறது. குறைந்த முயற்சியில் ஏதாவது சாகசங்கள் நிகழாதா என்று ஆசைப்படுகிறது.

குருடன் சாலையைக் கடக்கச் சிரமப்படுவதுபோல பி.சி.சி.ஐ. ஷேவாக் விஷயத்திலும் அல்லாடுகிறது. முதலில் டிராவிட் விருப்பத்தின் பேரில் அணியில் தொடர்ந்து இடம் பிடித்தார் ஷேவாக். ஆனால், அவர் தலையைத் தொங்கப்போட்டுக்கொண்டு பெவிலியனுக்குத் திரும்புவது வாடிக்கையாகிவிட்ட தருணத்தில் இன்று அவர் இங்கிலாந்து டூலிருந்து முற்றிலுமாக விலக்கப்பட்டுள்ளார். டெண்டுல்கருக்குப் பிறகு தனி மனிதனாக ஆட்டத்தின் போக்கை மாற்றக்கூடிய சக்தி ஷேவாக்குக்கே உண்டு. இருந்தும் ஷேவாக்கின் மன உளைச்சலை அதிகப்படுத்தும் விளையாட்டில் இறங்கியிருக்கிறது பி.சி.சி.ஐ.

இந்திய அணிக்கு யார் கோச்சாக இருந்தாலும் டெண்டுல்கர், டிராவிட், கங்கூலி, கும்பிளே போன்ற சீனியர்களுக்கு ஒரு ஸ்பூன் கூடுதல் மரியாதை கொடுக்க வேண்டும் என்பது எழுதப்படாத விதி. சீனியர் வீரர்கள் மைதானத்தில் ஆதிக்கம் செலுத்துகிறார்களோ இல்லையோ, மைதானத்துக்கு வெளியே அவர்கள் சொல்வதுதான் வேதம். காட்டுச் செடிபோல தன்னிஷ்டத்துக்கு வளர்க்கப்படுகிறார்கள். இதோ வீரர்களின் விருப்பத்திற்கிணங்க உலகக் கோப்பை சமயத்தில் விதிக்கப்பட்ட கடுமையான விதிமுறைகள் (குறிப்பாக விளம்பரத் தடைகள்) இப்போது வாபஸ் வாங்கப்பட்டுள்ளன.

உலகம் சாகுவதமில்லை என்கிற கூற்றை பி.சி.சி.ஐ. தொடர்ந்து நிரூபித்துக் கொண்டிருக்கிறது. வீரர்கள் சண்டிக் குதிரைகளாக இருந்தாலும் பி.சி.சி.ஐ. நொண்டிச் சாரதியாக இருக்கும் வரைக்கும் எதற்கும் நிரந்தரத் தீர்வுகள் ஏற்படப்போவதில்லை.

**- ச.ந.கண்ணன்**




* ஷேவாக்




* டிராவிட்

* ஃபோர்டு





# கல்கி



2007 ஜூலை 1
சர்வஜித் ஆனி 17
மலர் : 65
இதழ் : 48

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- *பாரதியார்*

## நெரிபடுகிறது நீதியின் குரல்வளை!

ஆர்ஜண்டினா தேசத்து நீதிபதி, நமது சி.பி.ஐ.க்கு வைத்துள்ள குட்டு நாட்டுக்கே தலைகுனிவை ஏற்படுத்தியிருக்கிறது. அது மட்டுமல்ல, நடுநிலையான, அரசு சாரா அமைப்பாக இயங்க வேண்டிய சி.பி.ஐ.யை இனி எந்த விஷயத்துக்குமே நம்ப முடியாது என்கிற முடிவுக்கு நம்மை வரச் செய்கிறது.

போஃபர்ஸ் ஊழல் விவகாரத்தில் குற்றம் சாட்டப்பட்டிருந்த ஒட்டாவியோ குவாட்ரோச்சியை முதலில் தப்ப விட்டது சி.பி.ஐ. அவரது மேல்நாட்டு வங்கிக் கணக்கை இயக்குவதற்கு விதிக்கப்பட்டிருந்த தடையை, ஓசைப்படாமல் நீக்கி, அத்தனை பணத்தையும் அவர் வேறு தேசத்துக்குக் கொண்டு செல்ல சௌகரியம் செய்து கொடுத்தார் ஒரு மத்திய அமைச்சர்! அரசின் கவனத்துக்குக் கொண்டு வராமல் அமைச்சர் தன்னிச்சையாக இயங்கிவிட்டதாகத் தெரிவித்தார் பிரதமர்!

சர்வதேச போலீஸ் குவாட்ரோச்சிக்கு வலை விரித்ததன் அடிப்படையில் ஆர்ஜண்டினாவில் அவரை போலீஸ் கைது செய்து இந்தியாவுக்குத் தகவல் தந்தது. இதன் பிறகே வேறு வழியின்றி அவரை விசாரணைக்கு அழைத்து வர சி.பி.ஐ. மனு செய்தது! அந்த முயற்சியில் படு தோல்வியும் அடைந்திருக்கிறது!

தோல்விக்குக் காரணம் சி.பி.ஐ.யின் திறமையின்மை என்பதைக் காட்டிலும் திட்டமிட்ட முயற்சியின்மை என்றே கூற






வேண்டும். வெறும் கண்துடைப்புக்காக ஒரு மனு தயாரித்தளித்து, ஆர்ஜன்டினா நீதிபதியின் வன்மையான கண்டனத்துக்குள்ளாகியிருக்கிறது சி.பி.ஐ. நீதிபதி, கண்டனம் தெரிவித்ததோடல்லாமல், எதிர்த்தரப்புக்கு வீண் செலவு ஏற்படுத்தியதற்காக நஷ்ட ஈடும் அபராதமும் விதித்திருக்கிறார்.

வரி செலுத்தும் அப்பாவி இந்திய குடிமக்கள், போஃபர்ஸ் பீரங்கி பேர ஊழலில் குவாட்ரோச்சி முறைகேடு செய்து கோடிகோடியாக சம்பாதித்ததைச் சகித்துக் கொண்டதோடு, இப்போது சி.பி.ஐ.யின் மோசடி காரணமாக விளைந்துள்ள அபராதச் செலவையும் குவாட்ரோச்சிக்குக் கொடுத்து அழ வேண்டும்!

ராஜீவ்காந்திக்கும் போஃபர்ஸ் ஊழலுக்கும் தொடர்பு இருப்பதை ஊர்ஜிதப்படுத்தக் கூடிய விசாரணைகள் அனைத்துமே அரசியல் செல்வாக்கினால் தடைபடுத்தப்பட்டு வந்துள்ளன; அல்லது பூசி மெழுகப்பட்டு வருகின்றன. ஆட்சியாளர்களின் கைப் பாவையாக மாறிவிட்டது சி.பி.ஐ. குற்றம் சாட்டப் பெற்ற அரசியல்வாதி அல்லது அவரது கட்சி ஆட்சிக்கு வந்துவிட்டால், வழக்குகள் உடனே வாபஸ் பெறப் படுகின்றன; அல்லது கிடப்பில் போடப்படுகின்றன. தப்பித் தவறி வழக்கை எடுத்து நடத்தினாலும், குற்றவாளி தப்புவதற்கு வசதியான விதத்தில் அது நடத்தப்படுகிறது. எதிர்கட்சியினர் மீதுள்ள ஊழல் குற்றச்சாட்டுக்கு சி.பி.ஐ. விசாரணை ஆரம்பமாகிறது!

இப்படி எடுப்பார் கைப்பிள்ளையாகிவிட்ட சி.பி.ஐ.தான் மதுரை தினகரன் அலு வலகத் தாக்குதல் வழக்கையும் விசாரித்துக் கொண்டிருக்கிறது; ஜெயலலிதா பேரில் உள்ள குற்றச்சாட்டுகளையும் விசாரித்துக் கொண்டிருக்கிறது. மாயாவதி ஆட்சிக்கு வந்ததுமே 'தாஜ் காரிடார்' வழக்கு கிடப்பில் போடப்படுகிறது. முலாயம் சிங் பேரில் விசாரணை தொடங்க ஏற்பாடாகிக் கொண்டிருக்கிறது.

நீதித் துறையைக் கடைசி நம்பிக்கையாக நாம் கொண்டிருக்கிறோம். ஆனால், வலுவான ஆதாரங்களைச் சமர்ப்பிக்காமல் கண்துடைப்பு வழக்குகள் தொடுக்கப்பட்டால் நீதி ஜெயிப்பதற்குப் பதிலாக அதன் குரல்வளை நெரிக்கப்படு கிறது. வஞ்சகம்தான் ஜெயிக்கிறது. ●

# கல்வி பெறக் கருணை;

இப் பள்ளியில் கணித-கணினி பிரிவில் மேல்நிலை முதலாமாண்டு படித்து வருகிறான் செல்வன் ல.விவேகானந்தன். நெசவாளர் குடும்பத்தைச் சேர்ந்த ஒழுக்கமுள்ள ஏழை மாணவன். இவனுக்குத் தங்கள் அறக்கட்டளை மூலம் உதவித் தொகை வழங்குமாறு அன்புடன் வேண்டுகிறேன்.



* ச.காயத்ரி



* ல.விவேகானந்தன்



* க.லெட்சுமி

-**தலைமை ஆசிரியர், அரசினர் மேல் நிலைப்பள்ளி, வெண்ணந்தூர், நாமக்கல் மாவட்டம்**

சுசீந்திரம், S.M.S.M. மேல்நிலைப் பள்ளியில் +2 பொதுத் தேர்வில், முதல் மாணவியாகத் தேர்ச்சி பெற்றுள்ளேன். மதுரை, தியாகராஜர் பொறியியல் கல்லூரியில் சேர்ந்துள்ளேன். என் தந்தை நாகர்கோவிலில் ஒரு கடையில் குறைந்த வருமானத்தில் வேலை பார்த்து வருகிறார். படிப்பைத் தொடர எனக்கு உதவித் தொகை வழங்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

- **க.லெட்சுமி, சுசீந்திரம்**

பி.எஸ்ஸி. பட்டப்படிப்பில் வேதியியலில் தங்கப் பதக்கம் பெற்றேன். இதில் கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளைக்கும் பங்கு உண்டு. தற்போது கோவை அரசினர் கலைக் கல்லூரியில் எம்.எஸ்ஸி. இரண்டாம் ஆண்டு வேதியியல் படித்து வருகிறேன். தயவுசெய்து எனக்கு இவ்வாண்டும் உதவி செய்து ஊக்குவிக்கக் கோருகிறேன்.

- **ச.காயத்ரி, கோயமுத்தூர்**

இவற்றைப் போன்ற கடிதங்கள் ஆயிரக்கணக்கில் ஆண்டுதோறும் வந்து குவிகின்றன. **கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளையின்** அறங்காவலர்கள், கடிதங்களையும் சான்றிதழ்களையும் கவனமாகப் பரிசீலித்து, உதவித் தொகை பெறத் தகுதியுடைய மாணவர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர்.

படிப்பில் சிறந்து விளங்கி, பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கியுள்ள இத்தகைய மாணவர்களுக்கு உதவ நீங்களும் விரும்புவீர்கள், நிச்சயம். உங்கள் நன்கொடையை MO, DD அல்லது Cheque மூலம் 'KALKI KRISHNAMURTHY MEMORIAL TRUST' என்ற பெயருக்கு அனுப்பி வைக்கலாம். நன்கொடைகளுக்கு 80G பிரிவின் கீழ் வருமான வரி விலக்கு உண்டு.

ரூ 1000 அல்லது அதற்கு அதிகமாகப் பெறப்படும் நன்கொடைகள் மூலதன நிதியில் சேர்ந்து, அதிலிருந்து கிடைக்கும் வருவாய் ஏழை மாணவ, மாணவியருக்கு நிரந்தரப் பயன் தரும்.

நன்கொடைகள் அனுப்ப முகவரி:

**KALKI KRISHNAMURTHY MEMORIAL TRUST,**
New No.14, Fourth Main Road,
Kasthurba Nagar, Adyar,
Chennai - 600 020

# கடவுளுக்குக் காணிக்கை!

சோ.சுப்புராஜ்

# தாம்பத்யம்!

உனக்கும் எனக்குமான
கயிறு இழுக்கும் போட்டி தொடங்கியது
நம் திருமண நாளிலிருந்து

இருவரும்
ஒருவரை நோக்கி ஒருவர்
இழுக்கத் தொடங்கினோம் மூர்க்கமாக

அவ்வப்போது தன்னிலை மறந்து
ஒருவரை நோக்கி ஒருவர்
நகர்ந்துவிட நேர்ந்தாலும் சீக்கிரமே
இயல்புக்குத் திரும்பி
இழுவையைத் தொடர்கிறோம்

கயிற்றின் மையம்
இற்றுக் கொண்டிருக்கிறது
இருவரின் கைகளிலும் கொப்புளங்கள்
கால்களும் தளர்ந்து போயின
இருந்தும்
இழுவையின் பிடி மட்டும்
இன்னும் இன்னுமென
இறுகிக்கொண்டு தானிருக்கிறது

இலக்குகள் எதுவுமின்றி வெறும்
பழக்கத்தால் தொடர்கிறோம்
அவ்வப்போது பாவனைகளிலும்



உலகத் தரத்துக்கு இணையாகவோ, மனதை விட்டு அகல மறுக்கும் உன்னதத் தன்மையுடனோ, யதார்த்தம் தவழும் காட்சிகளுடனோ வந்திருக்கும் படமல்ல சிவாஜி. ஆனால், அப்படியெல்லாம் இருந்திருந்தால் கூட இப்போது ரசிக்கும் அளவுக்கு ரசித்திருக்க முடியுமா என்பது சந்தேகம்தான்.

பிறக்கப் போகும் குழந்தைக்குக் கூட சிவாஜியின் கதை இந்நேரம் தெரிந்திருக்கும் (இரண்டு பேர் சந்தித்துக் கொண்டால் முதலில் கேட்கும் கேள்வி: சிவாஜி பார்த்தியா?). நல்லது செய்ய நினைக்கும் அமெரிக்க ரிட்டர்ன்ஸ் சிவாஜிக்கு, லோக்கல் புள்ளிகளால் பிரஷர். நடுத்தெருவுக்கு வருகிறார். மறுபடி ஒரு ரூபாயிலிருந்து தமது வாழ்க்கையைத் தொடங்குபவர், இந்தியாவை கறுப்புப் பணத்திலிருந்து மீட்கிறார்.

இதுவரை பார்த்திராத, இனியும் பார்ப்போமா என்று ஏங்க வைக்கிற அழகு ரஜினி. ஃப்ரேமுக்குப் ஃப்ரேம் அவர் செய்யும் அதிரடி ஸ்டைல்களால் தியேட்டர் குலுங்குகிறது. 'எம்மா என்னை கறுப்பா பெத்தே' என்று உருகுவதாகட்டும், 'வாங்க பழகலாம்' என்று ஸ்ரேயா குடும்பத்தை உலுக்குவதாகட்டும் மிரள வைக்கும் பட்டாசு. 'ஒரு கூடை சன்லைட்' பாடலில் பிரமிக்க வைக்கிறது நடன அசைவுகள். அவர் நாணயம் சுண்டும்போது வழுக்கிக் கொண்டுபோய் பாக்கெட்டுக்குள் விழுவது அந்த ஒரு ரூபாய் மட்டுமல்ல... நம் மனசும்தான். காமெடியில் கொடிகட்டிப் பறக்கும் சிவாஜி, சண்டையில் அனலாய்க் கொதிக்கிறார். மியூசிக் ஷாப்பில் எதிர்களை துவம்சம் செய்து, டிரைவ் இன்னில் காரில் அமர்ந்தே சர்சிதமாய் கதையை முடிக்கும் அடிதடிகள் இதுவரை ரஜினி






விமர்சனம்

படங்களில் பார்க்கப்படாதவை (ஹாட்ஸ் ஆஃப் டு பீட்டர் ஹெய்ன்!). எல்லா பாடல்களிலும் ரஜினியின் ரவுசு ராஜ்ஜியம். நயன்தாராவுடன் தமிழகத்தில் ஆடுவதில் தொடங்கி, ஸ்ரேயாவுடன் அயல்நாட்டில் ஜேம்ஸ்பாண்டாய் முறுவலிப்பது வரை மிரட்டல் அத்தியாயங்கள்.

ச்சும்மா இல்லை... ஸ்ரேயாவும் மின்னி மேய்ந்திருக்கிறார். ரஜினியைக் கண்டு மிரண்டு ஓடும்போது புள்ளிமான். அதுவே அவருக்காக உருகிக் கரையும்போது டிஃபிகல் குடும்பத் தலைவி. ஆனாலும் பாடல் காட்சிகளில் இந்தளவு கவர்ச்சி காட்டியிருக்க வேண்டாம்.

ஆந்திர வில்லன் சுமன். 'என்னங்க சிவாஜி' என்று அவர் மரியாதையோடு பேசும்போதே உள்ளிருந்து கொப்பளிக்கிறது அமிலப் பிழம்பு. ரஜினியிடம் ஒரு ரூபாய் கொடுத்து பிச்சையெடுக்கச் சொல்லும்போது ஊற்றெடுக்கும் உத்வேகம், மாணவர்களாலேயே மிதிபட்டு உயிர் விடும் வரை தொடர்வது சிறப்பு.

முக்கியமாக முழங்க வேண்டியது விவேக்கின் விஸ்வரூபத்தை. சமீப காலமாக சரிந்து கிடந்த இவரின் கிராப் 'சிவாஜி' ரிலீஸான ஒரே நாளில் உச்சிக்குச் சென்றுவிட்டது. ரஜினியின் தாய்மாமனாக வந்து 100% நகைச்சுவைக்கு உத்தரவாதம் தருகிறார். ரஜினி வாயைப் பொத்தி விட்டு விவேக் பேசும் பன்ச் டயலாக்குகளுக்கு வலிமை அதிகம்.

மணிவண்ணன், வடிவுக்கரசி, சாலமன் பாப்பையா, உமா பத்மநாபன், பட்டிமன்ற ராஜா, போஸ் வெங்கட் என்று படம் நெடுக நட்சத்திரக் கூட்டங்கள் மின்னி மின்னி மின்னலடிக்கின்றன.

வசனம் சுஜாதா. அட்லாண்டிஸ் விண்கல வேகம். 'பன்னிங்கதான் கூட்டமா வரும்... சிங்கம் சிங்கிளாத்தான் வரும்'- ஒரு பாணைப் பதம்.

தோட்டாதரணிக்கு ஸ்பெஷல் பொக்கே!



'வாஜி வாஜி', 'சஹானா' பாடல்களுக்கு அவர் அமைத்திருக்கும் செட்டுகள் காலம் கடந்தும் நிற்பவை. பின்னணியிலும் மிடுக்கு குறையாத ரஹ்மான். எல்லாப் பாடல்களும் ஹிட் என்றாலும், 'சஹானா'வுக்குச் சந்ததியையே எழுதிக் கொடுக்கலாம்.

அம்சமாய் ரஜினியை அடையாளப்படுத்தியதற்காகவே கே.வி.ஆனந்தின் கையை வலிக்கும்வரை குலுக்கலாம். பாடல் காட்சிகளில் கேமரா கோணங்கள் பிரமிக்க வைக்கின்றன.

ஷங்கர் பற்றி நிறையவே சொல்ல வேண்டும். ரஜினிக்காக ரொம்பவே காம்ப்ரமைஸ் செய்திருக்கிறார். இந்தியன், முதல்வன், அந்நியன் மாதிரி இதிலும் பவர்ஃபுல்லான (கறுப்புப் பணம்) விஷயத்தைக் கையிலெடுத்தவர், சொன்ன விதத்தில் தான் பின்தங்கி விட்டார். ரஜினி ரசிகர்களை திருப்தி பண்ணும் ஒரே நோக்கம்தான் படத்தில் தலை விரித்து ஆடுகிறது. விஸ்தீரணமாக நெஞ்சில் அறைந்து சொல்லப்பட்டிருக்க வேண்டிய இந்தியாவை அச்சுறுத்தும் கறுப்புப் பண விவகாரத்தை, ஜஸ்ட் லைக் தட் சொல்லி விட்டார். ரஜினி முன்னுக்கு வந்து, கதை பின்னுக்குப் போனதில் ஷங்கரின் முத்திரை இல்லாமல் வெறிச்சோடி விடுகிறது சிவாஜி. ஆனாலும் ரஜினியை பிரம்மாண்டமாய் காட்டியதில் ஷங்கருக்கு நிகர் ஷங்கர்தான்!

**- நிதர்ஸனா**

# நான் எதையும்

பெரியம்மாவுக்கு அறை தயாராகிவிட்டது. தயார் செய்தவள் பத்மபிரியாவாக்கும்! கிழக்கு பார்த்த அறை. நடை மாடத்தில் பிரம்பு நாற்காலியைப் போட்டுக் கொண்டு சூரியோதயத்தை, அஸ்தமனத்தைப் பார்க்க வேண்டும் பெரியம்மாவுக்கு. கண்ணை உறுத்தும்படியாக எதுவும் இருக்கக் கூடாது. பெரியம்மா ஒலிநாடா போட்டுக் கேட்க ஒரு குட்டி டூ இன் ஒன். எல்லாவற்றையும் விட, நடை மாடத்து நாற்காலிக்குப் பக்கத்தில் போட்டிருந்த குட்டி டீபாய்-காஃபி, பத்திரிகைகள் வைக்க வசதியாக.

அம்மா எட்டிப் பார்த்தாள். முகத்தில் திருப்தி தளும்பியது.

''என்னைவிட என் அக்காவை உனக்குத் தெரிஞ்சிருக்கு'' என்றாள் அம்மா, பத்மாவைப் பார்த்து. பாராட்டு, யாருக்குத்தான் பிடிக்காது. பாராட்டு என்பது உழைப்பின் சம்பளம், கௌரவம்.

பெரியம்மா இங்கு கடைசியாக வந்தது, பத்மா ஆய்வு மாணவியாகச் சேர்ந்த போது. மூன்றாண்டு ஆய்வை முடித்துக் கொண்டிருந்தாள் இப்போது.

''அக்கா உதவிக்கு ஆள் வச்சி இருக்கிறதா பாக்யம் அத்தை ஃபோன்ல சொல்லிச்சி. இப்போல்லாம் உடம்பு முன்னைப் போல இல்லையாம். ஆனாலும் தினம் ரெண்டு மணி நேரமாவது பள்ளிக் கூடத்துக்குப் போறதை விடலையாம். பள்ளி கமிட்டியும் அக்காவை விடாது. ஆண்டு விழா, மன்றத் தொடக்க விழா, பெற்றோர் ஆசிரியர் நட்பு விழா, அந்த கமிட்டி, இந்த கமிட்டின்னு எல்லாத்துக்கும் அக்கா வேணும். அறுபத்து ஏழு வயசுல என்னத்துக்குத் தனியா கிடந்து லோல்படணும்? வந்துடுன்னா கேட்காதே அது. பிடிவாதக்காரி.''

''இல்லம்மா...''

படுக்கையில் சாய்ந்து



வனமல்லியை நினைச்சா ரொம்ப வருத்தமா இருக்குங்கண்ணா!

கொண்டு பத்மா சொன்னாள்.

''அர்த்தம் வேணுமில்லையா- ஜீவிக்கிறதுக்கு! பெரியம்மாவுக்குப் பள்ளிக்கூடம்தான் அர்த்தம். அந்த வேரை எடுத்துட்டா... கஷ்டம்.''

அம்மா கணக்குப் போட்டாள்.

மொத்தம் அம்பத்தோரு வருஷம். ஒரே பள்ளிக்கூடம். வாத்தியார், தலைமை ஆசிரியை, தலைவர், அரசாங்க விருது.

எழுந்து உட்கார்ந்து கொண்ட பத்மா சொன்னாள்.

''நான் பத்மப் பிரியா. புலனாய்வுப் பத்திரிகை உலகத் தந்தை. சீ... தாய் நான்.

# மறப்பதே இல்லை!

அக்காகிட்ட படிச்சவன் அந்த நாட்டு மந்திரி..!

அம்மாவின் முகத்தில் கவலை நிழலாடித்து. பத்மா கேட்டாள்:

''பெரியம்மாவைக் கல்யாணம் பண்ணிக்கச் சொல்லிக் கேக்கலையா நீ?''

''எங்கடி. கல்யாணம், காதல், சேர்ந்து வாழறதுன்னு நீ என்கிட்ட ரைட் ராயலா பேசறே. அந்தக் காலத்துல நாங்க நினைச்சுப் பார்க்க முடியுமா? அக்காவுக்கும் எனக்கும் பதினாலு வருஷம் இடைவெளி. அம்மா போன பிறகு, அம்மாவா இருந்து என்னை வளர்த்து, படிக்க வச்சுக் கல்யாணம் பண்ணிக் கொடுத்ததே அக்காதான். நீ பொறந்த பிறகுதான் அக்காகிட்ட இதைப் பத்திக் கேக்கிற தைரியமே எனக்கு வந்துச்சு. கேட்டப்போ, மேல உத்தரத்தைப் பார்த்துக்கிட்டே இருந்துச்சு. அப்புறம் சிரிச்சுச்சி. 'என்னமோ தோணலைடி. வீட்டுக்கு வந்தா நீ; பள்ளிக்கூடம் போனா வகுப்புக்கு இருபது முப்பது குழந்தைகள். என்னமோ, கல்யாணம் ஆகி நூறு வருஷம் குடும்பம் நடத்திப் பிள்ளை குட்டிகளைப் பெத்த மாதிரி இருக்கு. தலை மட்டுமா நரைக்குது; மனசும்தானே! வேணாம்னு விட்டுட்டேன்'னுடுச்சி.''

பெரியம்மா என்கிற வனமல்லி அம்மாவின் காதல் ரகசியத்தைக் கண்டுபிடித்துக் கட்டுரை வடிவிலோ, கதை வடிவிலோ உலகத்துக்குத் தரப் போகிறேன்.''

''ஏதாவது தத்துப்பித்துன்னு எழுதி பெரியவங்க மனசைப் புண்படுத்திடாதேடி.''

''பயப்படாதே. பெரியம்மா கதையை அவங்களே வாசிக்கிறபோது அவங்க முகத்தைப் பார்க்கணும். அது ஒரு அனுபவம்.''

**வ**னமல்லி அம்மாள் பறந்து வந்து சேர்ந்தாள், வழக்கம்போல நாலு புடைவை மற்றும் நித்திய அவசியப் பொருள்களோடு. ஒரு பெட்டி. பாஸ்போர்ட் சமாசாரங்களுக்காக ஒரு கைப்பை.

''சுமை இவ்வளவுதானா?'' என்றாள் பத்மா.

''இந்தச் சுமையே அதிகம்'' என்றாள் பெரியம்மா. இரவு சாப்பிட்டுவிட்டு, மாடி மாடத்தில் வந்து அமர்ந்தவளிடம்,

''பெரியம்மா... ஒரு காரியம் பண்ணணும்'' என்றாள் பத்மா.

''என்னடா.''

''ஒரு கதை. அதை வாசிக்கணும் நீங்க.''

**பிரபஞ்சன்**

''நீ எழுதி இருக்கியா? கொடு. படிக்கிறேன். யாரோட கதை?''

''என் கதை. உங்களோட கதை. பலபேருடைய கதை''

காகிதத்தை எடுத்துக் கொடுத்தாள். பெரியம்மா கண்ணாடியை எடுத்து அணிந்து கொண்டு வாசிக்கலானாள்.

தெய்வ நாயகம் அறைக்குத் திரும்பும்போது இருட்டிவிட்டது. காலை முழுக்கப் பெரும் அலைச்சல். வரவேற்புகள், பாராட்டு விழாக்கள். சந்திப்புகள். தாம் இருந்து பணியாற்றிய இடங்களைப் பார்க்க ஆசைப்பட்டார். அவர் ஆசை நிறைவேற்றப்பட்டது. அலுத்துப் போய் அறைக்குத் திரும்பி இருந்தார். குளித்து ஆடை மாற்றிக்கொண்டு உறவினர்கள் தரும் விருந்துக்குப் புறப்பட வேண்டும். அழைப்பு மணி ஒலித்தது. தொடர்ந்து தலையை நீட்டினான் அறைப் பையன்.

''யாரோ ஒரு அம்மா உங்களைப் பார்க்கணும்னு வந்திருக்காங்க சார்.''

''வரச் சொல். இரண்டு காஃபி கொண்டு வரச் சொல்லு.''

ஒரு மத்திய வயது அறைக்குள் நுழைந்தாள். வணக்கம் தெரிவித்துக் கொண்டாள். சோபாவைக் காட்டி அமரச் சொன்னார். அந்த அம்மாவே பேசத் தொடங்கினாள்.

''என் பெயர் வனமல்லி சார். என் அப்பாவுக்கு உங்களைத் தெரியும். நண்பர்னு சொன்னார்.''

தெய்வநாயகம் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார். அவர் முகத்தில் புன்னகை விளங்கியது.

''அதுதான் விஷயம். அதுக்குத்தானம்மா இந்தத் தேசத்துக்கே வந்திருக்கேன். நான் பிறந்து விழுந்தது இந்த மண்மேலதான். என் இளமைப் பருவம், என் பள்ளிப் படிப்பு, அரசியல் எல்லாமே இங்கதானே. மறக்க முடியுமா? நான் எதையுமே மறக்கறதில்லையம்மா.'

''தேயிலைத் தோட்டக் குடியிருப்பிலே தானே ஐயா குடி இருந்தீங்க?''

''ரொம்பச் சரி. அங்கதானே என் தாத்தா, அப்பா, அம்மா எல்லாம் கிடந்து உழல்னாங்க. நாங்க வெள்ளைக்காரன் காலத்தில் இங்க வந்த முதல் தலைமுறை அடிமைங்கம்மா. என்னோட மாமரத்துல கல் எறிஞ்சி மாங்காய் தின்னவன், இன்றைய தேதியில அயலகத்தார் அனுமதி இலாகாவில் பெரிய அதிகாரி. மத்தியானம் அவனோடதான் எனக்குப் பகல் விருந்து. மறந்துட முடியுமா? மனுஷர்களை மறக்க முடியலேம்மா.''

காஃபி வந்தது. வனமல்லியை அருந்தச் சொல்லி உபசரித்தார் அவர்.

''இன்னிக்கு வானொலியில் கேட்டேன். மத்திய சிறைச்சாலைக்குப் போய் நீங்க இருந்த அறையைப் பார்த்தீங்களாமே...''

அவருடைய முகம் பரவசத்தில் மின்னியது. காஃபியை ஒரே மடக்கில் குடித்து முடித்தார். நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''அதுதானே விஷயம்மா... உங்களுக்கு எல்லாமே தெரிஞ்சிருக்கே... பாரிஸ்டர் காந்தி - அப்போல்லாம் அவருக்கு அதுதான் பேர் - ஏற்பாடு பண்ணின முதல் தர்ணாவில வேடிக்கை பார்க்கப் போனேன். என்னையும் அடிச்சு ராணுவ வண்டியிலே தூக்கிப் போட்டுப் போனான் ஆர்மிக்காரன். சின்னப் பையன்ட்டு முதுகில நாலு பிரம்படி போட்டு அனுப்பிச்சான் போலீசுக்காரன். இப்போவும் என் முதுகில அந்தத் தழும்பைக் காண முடியும்.''

அவர் கண்கள் இப்போது உள்ளுக்குள் அவரைத் தேடித் துழாவிக் கொண்டிருந்தன. ''காந்தி இந்தியாவுக்குப் போன பிறகும், போராட்டம் தொடர்ந்துச்சு. இங்கிலாந்துக்காரனும் ஃபிரஞ்சுக்காரனும் எங்கே போனாலும் மக்களைப் போராட வச்சுடுவானுங்களே. பல தடவை அரசு விருந்தாளியா அந்தச் சிறைக்குப் போக நேர்ந்துச்சு.''

அவர் இன்னும் சிறைக் கம்பிகளுக்குள்

**தையில் கல்யாணம் நிச்சயம் என்று சொல்லிச் சென்றதை வனமல்லி கூற நினைத்தாள். அதன்பிறகு ஐநூறுக்கும் மேற்பட்ட தைகள் வந்து சென்றதையும் சொல்ல வேண்டும் போலிருந்தது!**

தன்னை இருத்திக் கொண்டிருந்தார்.

''அப்புறம் தமிழ்நாட்டுக்குப் போனீங்க இல்லையா, ஐயா?''

''ரொம்பச் சரி. என் வாழ்க்கையே உங்களுக்குத் தெரிஞ்சிருக்கேம்மா... என் தாய் மாமன் அழைப்பை ஏத்து அங்கே போனேன். சொத்து விவகாரம். பஞ்சாயத்து. உடனே திரும்பணும்னுதான் திட்டம். ஆனால், அங்கே நடந்த இயக்கங்கள்லே பங்கெடுக்க வேண்டியதாயிடுச்சு. ம். என்ன பண்ண? மாமா பாரிச வாயுல காலமானார்; அத்தை பிளேக்ல. ராதாவைக் கல்யாணம் பண்ணும்படி ஆச்சு.''

எதிரில் எதிரில் அவர்கள் இருந்தார்கள். மிகத் தொலைவிலும் இருந்தார்கள்.

''ஐயா.''

''என்னம்மா?''

''காத்தவராயன் நினைவு இருக்கா? உங்க சங்கச் செயலாளர்.''

அவர் முகத்தில் விளக்கெரிந்தது.

''நினைவு இருக்காவா? அவனை மறக்க முடியுமா? நான் எதையுமே மறக்கிறதில்லையம்மா...''

வனமல்லி கைக்குட்டையால் முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டாள். அவளுக்கு நிறையச் சொல்ல வேணும் என்று இருந்தது. அவள் பள்ளிப் படிப்பை, பள்ளியிலேயே முதலாகத் தேறியதைச் சொல்ல நினைத்தாள். அம்மா இல்லாத இடத்தைத் தானே எடுத்துக்கொண்டு, அப்பாவின் ஆசையை நிறைவேற்றும் பொருட்டு வேலையை ஏற்றுக்கொண்டதைச் சொல்ல நினைத்தாள். ஒரு நாள் மாலை, தெய்வநாயகம் அவர் அம்மாவோடு இனிப்பும் பூவும் வாங்கி வந்து பேசியதைச் சொல்ல நினைத்தாள். வீட்டுக்கு வெளியே மஞ்சள் பூ பூத்துச் சொரிந்ததை அவர் பாராட்டியதைச் சொல்லவும் நினைத்தாள். அவர் அம்மா, உரிமையோடு அடுக்களையில் தான் காஃபி போட்டு வருவதாகச் சொல்லிச் சென்றதை, அந்தச் சில நிமிடங்கள் வாசலில் பன்னீர்ப்பூ மரத்தின் கீழ் அவர்கள் நின்றதை, எங்கிருந்தோ ஓர் ஒற்றைக் குயில் கூவியதைக் கேட்டு அவள் சிலிர்த்துப் போய் நின்றது பற்றி அவரிடம் சொல்ல நினைத்தாள். 'தோழருடன் வந்த போது எல்லாம் எனக்கு அந்த எண்ணம் இல்லை. ஒரு நாள் ஏதோ வேலையாகப் பள்ளிக்கு வந்தேன். அப்போது நீங்கள் வகுப்பில் பாடம் நடத்திக் கொண்டிருந்தீர்கள். ஏகாக்கிர சிந்தனையோடு, உலகையே மறந்து, குண்டு போட்டால் கூடத் திரும்பிப் பார்க்க மாட்டீர்கள் எனும்படியாகப் பணியில் அந்தச் சிரத்தை, ஏகாக்கிர சிந்தனை என்னைத் திகைக்க வைத்துவிட்டது. அந்தக்



கணத்தில் உங்கள் மேல்... பிரியம்... ஒரு ஈடுபாடு விழுந்து விட்டது. அதை உங்களிடம் சொல்ல வேண்டும் என்று நினைத்தேன். அதற்கான தைரியம் இல்லை. அம்மாவோடு வந்து பேசுவது கௌரவம் என்று நினைத்தேன். நீங்கள் சம்மதித்தால், ஒரு சின்ன வேலை தமிழ்நாட்டில் இருக்கிறது; அதை முடித்து விட்டு வந்து

## இது எங்க சம்மர்!



சமீபத்தில் கொடைக்கானலுக்குப் போயிருந்தோம். சீஸன் சமயமாதலால் தங்குவதற்கு ரூம் எதுவும் கிடைக்கவில்லை. பிறகு அலைந்து திரிந்து சிங்கிள் காட்டேஜ் ஒன்றைப் பிடித்தோம். அதன் உள்ளே நுழைந்ததுதான் தாமதம்... அனைவரும் அலறி விட்டோம். ஆங்காங்கே தூசியும் ஒட்டடையுமாகப் பாழடைந்து போயிருந்தது அந்தக் கட்டடம். அனைவரும் திகிலில் உறைந்து விட்டோம். உடனே அறையை காலி செய்துவிட்டு, வேறொரு இடம் பிடித்துத் தங்கினோம். சுற்றிப் பார்த்தல் முடிந்ததும் என் அண்ணன் என்னிடம், "செண்ட் பாட்டிலை காட்டேஜிலேயே வைத்துவிட்டு வந்துவிட்டேன். அது ரொம்ப காஸ்ட்லி! போய் எடுத்து வந்துடு" என்றார். மீண்டும் பயம் தொற்றிக் கொண்டது. நான்கு பேராகப் போய் அந்த செண்ட் பாட்டிலை எடுத்து வந்தோம். இப்போதும் அந்த பாட்டிலைப் பார்த்தால், அந்தப் பாழடைந்த கட்டடம் நினைவுக்கு வந்து மிரட்டுகிறது.

பா. விஜய்

வரும் தையிலேயே கல்யாணத்தை வைத்துக் கொள்ளலாம். நான் பேச்சு மாறமாட்டேன். எல்லாம் உங்கள் விருப்பத்தைப் பொருத்து' என்று அவர் சொன்னதைச் சொல்லலாமா என்று நினைத்தாள்.

அம்மாவும் பிள்ளையும் புறப்படும் போது, தையில் கல்யாணம் நிச்சயம் என்று விட்டுச் சென்றதைச் சொல்ல வேண்டும் என்று நினைத்தாள். அதன் பிறகு, ஐநூறுக்கும் மேம்பட்ட தைகள் வந்து சென்றதையும் சொல்ல வேண்டும் போல இருந்தது.

வனமல்லி எழுந்தாள்.

''புறப்பட்டுவிட்டீர்களா? சரி... நேரம் கடந்துவிட்டது. என் மனசில் இருந்த என் ஜென்ம பூமியைப் பார்த்துவிட்ட மகிழ்ச்சியில் இருக்கிறேன். என் மனசில் வைத்திருந்த பல புதையல்களைத் தோண்டி விட்டீர்கள். மறந்துவிட்டேனே... உங்கள் பேர் என்ன, தெரிந்துகொள்ளலாமா?''

அவன் சிரித்தான். கைகூப்பி வணங்கி விட்டு வெளியேறினான்.

**வ**னமல்லி பெரியம்மா கதையைப் படிப்பதையே பார்த்துக் கொண்டிருந்தாள் பத்மப்ரியா. வனமல்லியின் முகம் மலர்ந்ததை, கருங்கியதை, வெளுத்ததை, கண்ணீர் பொங்கி வழிந்ததை, கைக்குட்டையால் அடிக்கடி முகத்தைத் துடைத்ததை அவள் கவனித்தாள்.

பெரியம்மா படித்து முடித்து, கதையை பத்மப்ரியாவிடம் தந்தாள். நெடுநேரம் அமைதியாக இருந்தாள். எழுந்து மாடத்தில் வந்து நின்றாள்.

''பெரியம்மா.''

''என்னடா?''

''உங்களை அவர் கடைசி வரைக்கும் புரிஞ்சுக்கவே இல்லையா?''

இல்லை என்பதாகத் தலையசைத்தாள். குமுறி அழுதாள் வனமல்லி.

''இப்படி ஒரு மனுஷருக்காக உங்க வாழ்க்கையை எதிர்பார்ப்பிலேயே வீணாக்கிவிட்டீங்களே பெரியம்மா.''

''அப்படி இல்லைடா... தப்பு என் மேல இல்லை. அவர் மேல்தான். அவர் சரியாக இல்லை. அதுக்காக நான் சரியா இருந்தது எப்படித் தப்பாகும்? வார்த்தை பெரிசு இல்லையா?''

பத்மப்ரியா பெரியம்மாவின் அருகில் வந்து அணைத்துக் கொண்டாள்.

''பெரியம்மா.''

''என்னடா?''

''வருத்தப்படறீங்களா?''

''இப்ப இல்லடா...''

★ கு.நித்யாநந்தன், திருச்சி

**கிரேஸி அண்ணே! பாட்டி வடை சுட்ட கதையில, பாட்டி சுட்ட வடை, பாட்டியிடமிருந்து காகம் சுட்ட வடை.... ரெண்டுக்கும் என்ன வித்யாசம்....?**

உங்கள் கேள்விக்கான வடையை.... ஸாரி விடையை.... வள்ளுவர் ஸ்டைலில் குறளாகக் கூறிவிடுகிறேன்....

தீயினால் சுட்டவடை திங்க;
அதைக் காகம்-
வாயினால் சுட்டவிதம் தீங்கு....

★ரேவதிப்ரியன், ஈரோடு

**இந்தக் கேள்வி கேட்கும் பழக்கத்தை யார் துவக்கியிருப்பார்கள்....?**

ஏவாளாக இருக்கலாம்.... தொண தொணவென்று கேள்வி கேட்கும் மனைவி ஏவாளை அடக்க, கணவன் ஆதாம், அவள் வாயில் ஆப்பிளைத் திணித் திருக்கலாம்....

★ அ.முரளீதரன், மதுரை

**உங்களிடம் இல்லாத ப்ளஸ் பாயிண்ட், மைனஸ் பாயிண்ட் எது... எது....?**

என்கிட்ட இருக்கற, இல்லாத ப்ளஸ் பாயிண்ட், மைனஸ் பாயிண்ட் எல்லாமே நான் எழுதும் பால் பாயிண்ட்....

★ ராஜகோபாலன், பெரம்பூர்

**நகைச்சுவை எழுத்துக்கு உங்களுக்கு இன்ஸ்பிரேஷன் யார்....?**

வேகமாகக் கதவைத் திறந்து, வேகமாக அறைக்குள் நுழைந்த கதாநாயகன் அதே வேகத்தில் அறையை விட்டு வெளியே வந்தானாம்.... எந்த அளவுக்கு வேகம் என்றால், அறையை விட்டு வெளியேறும் போது அவன், அறைக்குள் நுழையும் தன்னையே பார்த்து ஹலோ சொல்லிக் கொண்டானாம்.... பி.ஜி.வுட்- ஹவுஸின் இந்த உயர்வு - நகைச்சுவையணி , நான் தினம் உண்ணும் ஊட்டச்சத்து.... இந்த உத்தியை எனது நாடக, சினிமா வசனங்களில் அதிகம் கையாளுவேன்.... உதாரணத்துக்கு ஒரு வசனம்.... டெய்லர் பேண்டை ரொம்ப லூஸாகத் தைத்து விட்டார்.... எந்த அளவுக்கு அது லூஸ்™ என்றால்.... ஹோட்டலில் டிபன் சாப் பிட்டுவிட்டு அவன் எழுந்துவிட்டான்.... ஆனால், அவன் பேண்ட் மட்டும் எழுந்திருக்கவில்லை....



க் கே... ...ியைக் கேளுங்கள்! கிரேஸியைக் கேளுங்...

# காக்கா

★ கே.எஸ்.கோவர்த்தனன்,
வேளச்சேரி

**நாடகமே உலகம். அதில் நாமெல்லோரும் நடிகர்கள் என்றால்.... பார்வையாளர்கள் யார்....?**

சிவாஜி சினிமா.... முதல் நாள், முதல் காட்சி நாம் பார்ப்பதுபோல கனவு வருகிறது... இந்தக் கனவில் பார்வையாளன் யார்! எனக்கென்னவோ.... நாடகமே உலகம் என்பதைவிட, உலகமே ஒரு நாடகம் என்பது ஓரளவு சரி போலத் தோன்றுகிறது.... இந்த நாடகத்தில் பங்கேற்காமல், பார்வையாளனாக மட்டும் இருக்கப் பக்குவப்படுத்திக் கொண்டால் வாழ்க்கை சூப்பராகும்....

★ அனன்யா, பெங்களூர்

**முகம் பார்க்கும் கண்ணாடிகளே இல்லாமல் போனால்....?**

அலங்காரமும் குறையும்.... அகங்காரமும் குறையும்....

★ வீ.உதயகுமார்,
வீரன்வயல்

**தாங்கள் சகுனம் பார்ப்பது உண்டா....?**

தன்னுடைய வயலுக்கு ராமசாமி சேதம் விளைவித்து விட்டதாக, பக்கத்து வீட்டுப் பெரிய சாமி மூலம் கேள்விப்பட்ட சின்னசாமி, அரிவாளோடு ராமசாமியை வெட்ட ஆயத்தமானான்.... அப்போது பூனை ஒன்று குறுக்கே போனது.... 'சின்னசாமி, சகுனம் சரியில்லை.... பத்து நிமிஷம் கழிச்சுப் போ....' என்றார் சின்னசாமியின் அப்பா. ஐந்தாவது நிமிடம் வீட்டுக்குள் நுழைந்த ராமசாமி 'சின்னசாமி, பத்து நாள் பட்டணம் போயிருந்தேன்.... நேர உங்க வீட்டுக்குத்தான் வரேன்.... இந்தா நீ பாக்கணும்னு ஆசைப்பட்ட விருமாண்டி கேஸட்டு' என்று வெகுளியாகக் கூறினான்.... ராமசாமி அரிவாள் வெட்டால் சாகாமலும், சின்னசாமி ஜெயிலில் கம்பி எண்ணாமலும் தடுத்தது பெரியவர் கெட்ட சகுனம் என்ற பெயரில் போட்ட முட்டுக் கட்டை அல்லது ஸ்பீட்-பிரேக்கர்....

★மு.ரா.பாலாஜி, கோலார்
தங்கவயல்

**குசேலன்-கர்ணன்-குகன்.... இவர்களில் யாருடைய நட்பு உயர்ந்தது....?**

எந்தவித எதிர்பார்ப்புமின்றி வந்த மீனவ-நண்பன் குகனைத் தழுவிடத் தோளும் கொடுத்து.... ஜாதி, மதம், இனம் பாராது 'நின்னொடு ஐவரானோம்' என்று சகோதரத்துவமும் அளித்த ஸ்ரீராமனின் நட்பு....






# சுட்ட வெடி!



படித்த பிறகு சம்பாதிக்க முடியும். படிப்புச் செலவை எப்படி எதிர் கொள்வது? அதற்கு முன் வந்து உதவு கின்றன நமது வங்கிகள்.

● **வ**ங்கியில் கணக்கு வைத்திருப் பவர்களுக்கு மட்டுமல்லாமல் புதிதாக கல்விக் கடன் கேட்டு வருபவர் களையும் அண்மைக் காலமாக வரவேற்கத் துவங்கி யிருக்கின்றன நமது வங்கிகள்.

● இந்தியாவில் கல்வி பயில கடன் கேட் பவர்களுக்கு ஏழரை லட்சம் வரையிலும், வெளிநாடுகளில் கல்வி பயில கடன் கேட்பவர்களுக்குப் பதினைந்து லட்சம் வரையிலும் கடன் கொடுக்கப்படு கிறது.

● நான்கு லட்சம் ரூபாய் வரை எந்த உத்தரவாதமோ, சொத்து அடமானமோ கேட்காமல் கடன் கொடுக்கப்படு கிறது. பங்குப் பணம் (margin) ஏதும் கட்ட வேண்டாம்.

நான்கு லட்சத் துக்கு மேல் கடன் வாங்குபவர்கள் வாங் கும் தொகையில் ஐந்து சதவிகிதத் தொகையை முன் பங்குப் பண மாகக் கட்ட வேண் டும். வெளிநாடுகளில் பயில கடன் வாங்கு பவர்கள் பதினைந்து சதவிகிதம் முன் பங்குப் பணமாகக் கட்ட வேண்டும்.



● கல்விக் கட்டணம், தேர்வுக் கட் டணம், விடுதிக் கட்டணம், புத்தகங் கள், கல்விச் சுற்றுலா, பிராஜக்ட் தொகை, கம்ப்யூட்டர் வாங்க என்று பல செலவுகளுக்கு இந்தக் கல்விக்கடன் மிக உதவியாக இருக்கிறது.

● முதலில் வங்கியில் கொடுக்கப் படும் விண்ணப்பப் படிவத்தைப் பூர்த்தி செய்து அத்துடன் பத்தாம் வகுப்பு, ப்ளஸ் டூ ஆகியவற்றின் மார்க் ஷீட்டு களை இணைத்துக் கொடுக்க வேண் டும். கல்லூரியின் அட்மிஷன் கார்டு மற்றும் அந்தக் கல்லூரி வருடம் ஒன் றுக்கு வசூலிக்கும் தொகையினை விளக்கும் கல்லூரிக் கடிதம் ஆகிய வற்றையும் மனுவுடன் இணைக்க வேண்டும். கேபிடே ஷன் கட்டணத்தை யெல்லாம் உங்கள் பர்ஸ்தான் கவனித்துக் கொள்ள வேண்டும்.

● இஞ்ஜினியர், டாக் டர் போன்ற தொழிற் படிப்புகளுக்கு மட்டு மல்ல, கலை மற்றும் அறிவியல் படிப்பு




# படிக்க 15 லட்சம்!

களுக்கும் கல்விக் கடன் உண்டு.

● கல்விக் கடன் வாங்குபவர்கள் தாம் படிக்கும் கல்லூரி, படிக்கப் போகும் படிப்பு (course) பல்கலைக்கழக அங்கிகாரம் பெற்றவையா என்பதை முதலில் உறுதி செய்து கொள்ள வேண்டும். குறிப்பாக, இன்ஜினீயரிங் படிப்பவர்கள் தங்கள் கோர்ஸுக்கு அகில இந்திய தொழில்நுட்பக் கழகம் அனுமதி கொடுத்திருக்கிறதா என்றும் மருத்துவக் கல்லூரியில் படிப்பவர்கள் அகில இந்திய மருத்துவக் கழகம் அங்கீகாரம் கொடுத்திருக்கிறதா என்றும் பார்க்க வேண்டும். வங்கிகள் இதை முக்கியமாக வலியுறுத்துகின்றன.

● முழுப் படிப்புச் செலவையும் வங்கி ஒரே தவணையில் கடனாகக் கொடுக்காது. ஒவ்வோர் ஆண்டும் கட்ட வேண்டிய தொகை, கல்வி ஆண்டு தொடங்கும்போது கடனாக வழங்கப்படும்.

● கல்விக் கடன் கொடுக்க பெற்றோரின் வருமானம் அடிப்படையாக எடுத்துக் கொள்ளப்படுவதில்லை. ஆனால் மாணவ, மாணவியர் பத்தாம் வகுப்பு மற்றும் ப்ளஸ் டூவில் குறைந்தது 60 சதவிகித மார்க் பெற வேண்டும். அதிக மார்க் பெறுபவர்கள் இயல்பாகவே முன்னுரிமை பெறுகிறார்கள்.

● கல்விக் கடன் பெறும் மாணவ, மாணவிகளின் படிப்பை வங்கி கவனித்து வரும். அவ்வப்போது பரீட்சைகளில் வாங்கிய மார்க்கை வங்கிக்குக் கொடுக்க வேண்டும். திருப்தியடையும் பட்சத்தில் தொடர்ந்து வங்கி ஆர்வத்துடன் கடன் கொடுக்கும்.

● படிப்பு முடிந்தவுடன், ஒரு வருடமோ அல்லது ஆறு மாதத்துக்குள்ளோ அல்லது வேலை கிடைத்தவுடனோ, கடன் தொகையினை வட்டியுடன் சேர்த்துத் தவணை முறையில் திருப்பிச் செலுத்த வேண்டும். ஐந்து வருடங்கள் அல்லது வசதிக்கேற்ப தவணைகளை அமைத்துக் கொள்ளலாம்.

● இன்னொரு சுலபமான வழியும் இருக்கிறது. பெற்றோரின் வருமானம் கணிசமாக இருப்பின் வாங்கிய கடனுக்கான வட்டியை படிப்புக் காலத்திலேயே திருப்பிக் கட்டலாம். பின்னாளில் அசல் மட்டும் கட்டுவதற்கு எளிதாக இருக்கும்.

– கௌசி



# தினம் 30 நிமிடங்கள்... உதறித் தள்ளுங்க உடல் பருமனை!

"குறைவாக உண்பவர்களை விட, கூடுதலாக உண்பவர்களே அதிகமாக நோயில் துன்புற்று, மருத்துவரிடம் வணக்கம் சொல்கின்றனர்'' என்று அவ்வப்போது தம் படை வீரர்களிடம் உணவைக் குறைக்கும்படி அறிவுறுத்துவார் மாவீரன் நெப்போலியன்.

இக் கூற்று அந்தக் காலத்துக்கு மட்டுமன்று; எந்தக் காலத்துக்கும் பொருந்தும். உடல் பருத்துவிட்டால் மருந்து மாத்திரைகளைச் சாப்பிட்டு அந்தப் பருமனைக் குறைக்க இயலாது. சரி, அறுவை சிகிச்சை செய்துகொள்ளலாமா? அதிலும் பக்க விளைவுகள் ஏற்பட வாய்ப்பு உண்டு. செலவும் அதிகம்.

வேறு என்னதான் செய்வது? உடல் பருமனின் தன்மையைத் தெரிந்துகொண்டு அதைப் பதமாகத் தட்டி வைத்தாலே போதும்.

பொதுவாக, உடல் பருமன் என்பதும் அதிக எடை என்பதும் ஒன்றாகவே கருதப்பட்டாலும் இரண்டுக்குமிடையே வேறுபாடு உண்டு. அதிகமான கொழுப்பு இல்லாமல் எடை கூடுதல் மட்டுமே, உடல் பருமன் ஆகும்.

உதாரணமாக, ஒரு மல்யுத்த வீரரின் உடல், கொழுப்பின் காரணமாக அன்றி, தசைகளின் வளர்ச்சி காரணமாக கூடுதல் எடையுடன் இருக்கும். எப்படியிருந்தாலும் அதிகக் கொழுப்பு, அதிக எடை ஆகிய இரண்டுமே குறைக்கப்பட வேண்டியவைதாம்!

நமக்குப் பொருத்தமான, சீரான எடையளவை மிகவும் சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். நம் உயர அளவில் - அதாவது சென்டிமீட்டரில் நூறைக் குறைத்து, மீதி எவ்வளவு இருக்கிறதோ அதுவே நமது சீரான எடையாக இருக்க முடியும். அதாவது ஒருவரது உயரம் 170 செ.மீ என்றால், அவரது எடை 170-100 = 70 கிலோ அல்லது அதற்குச் சற்றுக் குறைவாக இருக்க வேண்டும்.

பல்வேறு நோய்களுக்கு ஆதாரமாக இருக்கும் உடல் பருமனைக் குறைக்க நாம் செய்ய வேண்டியவை:

- அன்றாடம் உடற்பயிற்சி செய்ய வேண்டும். நடை, மெதுவாக ஓடுதல், சைக்கிள் ஓட்டுதல், நீந்துதல், ஏரோபிக்ஸ் பயிற்சி, நடனம் போன்ற ஏதாவது ஒன்றை முப்பது, நாற்பது நிமிடங்களாவது செய்ய வேண்டும்.
- உடலில் குறிப்பிட்ட சில பகுதிகளில் உள்ள தசையைக் குறைக்க வேண்டுமானால், அதற்கான யோகாசனங்களைச் செய்யலாம். பெரும்பாலான இந்தியர்கள் ஆனந்தத்தின் மிகுதியில் அதிகமாகச் சாப்பிட்டு வயிறு, இடுப்புப் பகுதிகளில்தான்

தசையை 'டெபாஸிட்' செய்து வருகின்றனர். அப்படி சேர்வதுதான் மாரடைப்பு வருவதற்கு அதிகமான வாய்ப்புகளை ஏற்படுத்துகிறது.

- காய்கறிகளை தாராளமாகச் சேர்த்துக் கொள்ளுங்கள். தானிய வகைகள், சோயாபீன்ஸ் போன்ற நார்ச்சத்து மிகுந்த உணவு மிகவும் அவசியம். இவை குடல் போன்ற உட்புறப் பகுதிகளில் உள்ள கொழுப்பைக் கரைக்க உதவும்.
- அன்றாட உணவில் புரதச் சத்தை அதிகமாகச் சேர்த்துக் கொண்டு, கொழுப்பு, மாவுச் சத்தைக் குறைத்துக் கொள்ளுங்கள்.

**தவிர்க்கப்பட வேண்டியவை:**

- இயல்பாகவே கொழுப்பு நிறைந்த உணவையோ, கொழுப்பாக மாறக்கூடிய உணவையோ

## டாக்டர் மிஸ்ரா



சாப்பிடக் கூடாது. நம் உடலுக்குத் தேவையான காலரியில் 10-15 சதவிகிதத்தை விஞ்சி விடாத அளவில்தான் கொழுப்பு இடம்பெற வேண்டும்.

- ஃபாஸ்ட் ஃபுட் வகைகளை நெருங்கவே கூடாது. வயிறு, இருதயம் இரண்டுக்குமே இவை எதிரிகள். ஃபாஸ்ட் ஃபுட் உணவுகள் வைட்டமின்களையும் ஆன்ட்டி - ஆக்ஸிடான்ட்களையும் அழிப்பதுடன், நேரிடையாகவும் மறைமுகமாகவும் கொழுப்பை நிரப்புகின்றன.
- நமது சமுதாயத்தில் அவ்வப்போது நடைபெற்று வரும் விருந்துகளின் சுவைகளில் மயங்கி, அதிகமாகச் சாப்பிட்டு விடாதீர்கள். ஸ்வீட் ஐட்டங்களையும் கண்களால் ரசித்துவிட்டு வந்துவிடலாம். இவற்றில் கொழுப்பு இல்லாவிட்டாலும் காலரிகள் அதிகம். அத்தனை உபரி காலரிகளையும் நமது உடல் கொழுப்பாக மாற்றிச் சேமித்துக் கொள்கிறது.
- மது கொழுப்பைக் குறைத்து இருதயத்தைக் காப்பாற்றுவதாக பெரும்பாலோர் நம்புகின்றனர். எப்படியோ சமுதாயத்தில் பரவிவிட்ட இந்தக் கருத்து உண்மையே அல்ல.
- நமது உடல் தேவைக்குக் கூடுதலாக நாம் சேர்த்துக்கொள்ளும் ஒவ்வொரு பவுண்ட் கொழுப்பும் இரத்தக் குழாய்களில் சுமார் 15 கி.மீ அளவுக்கு ஆங்காங்கே தேங்குகிறது. அதன்மூலம் இதயத்துக்கு வேலைப்பளு அதிகமாகிறது.

இத்தகைய உடல் பருமன் இருதயக் கோளாறுகள், நீரிழிவு மட்டுமல்லாது ஹைபர் டென்ஷன் போன்றவற்றுக்கும் வழிகோலுகிறது.

பொருளாதாரத்தில் வேண்டுமானால் செலவுக்கு மேல் வரவு இருக்கலாம். உடல் இயக்கத்தில் வரவு என்பது உணவு; செலவு என்பது உழைப்பு என்கிற அடிப்படையில், ஒருபோதும் செலவுக்கு விஞ்சிய வரவு கூடவே கூடாது.

– **'அப்போலோ லைஃப்' இதழிலிருந்து**

தொகுப்பு: **சா.ஜெயராஜ்**



**சுஜாதா**

# எட்டாம் நூற்றாண்டில் சர்ஜரி





நம் பழைய நூல்களில் மருத்துவக் குறிப்புகள் பல இருப்பதாகச் சொல்கிறார்கள். இரண்டாம் நூற்றாண்டில் கஸ்ருதர் எழுதிய நூல்களில் முதல் பிளாஸ்டிக் சர்ஜரி போன்ற அறுவை சிகிச்சைகள் பற்றிய குறிப்புகள் உள்ளனவாம். தமிழிலக்கியத்தில் எனக்குத் தெரிந்தவரை முதல் அறுவை சிகிச்சையை பற்றிக் குறிப்பிட்டவர் குலசேகர ஆழ்வார்.

இவர் எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சேரமன்னர். இன்றைய கொல்லம் நகரம் அன்று கொல்லி என்று அழைக்கப்பட்டது. அதைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சேர மன்னர் திடவிரதனின் மகன் குலசேகரர் பட்டத்துக்கு வந்து, மெள்ள மெள்ள அரசியல் நாட்டம் குறைந்து திருமாலின்பால் ஈர்க்கப்பட்டார் குலசேகரர். அதற்குச் சாட்சியாக இருப்பது இவரது 'பெருமாள் திருமொழி'யின் 105 பாடல்களே.

இவற்றில் ஒன்றில்தான் இந்த சர்ஜரிக் குறிப்பு உள்ளது.

'வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
மாளாத காதல் நோயாளன் போல், மாயத்தால்
மீளாத் துயர் தரினும் வித்துவக்கோட்டு அம்மா! நீ
ஆளா உனது அருளே பார்ப்பன் அடியேனே'

(மாயத்தால் - விளையாட்டாக, ஆளா- அடிமை செய்வதற்கு)

'ஒரு மருத்துவன் கத்தியால் அறுத்துச் சூடு போட்டாலும் அவன் அதை நோயாளியின் உயிரைக் காப்பாற்றும் நோக்கத்தில் செய்வதால் மருத்துவன் மேல் நீங்காத அன்பு ஏற்படுகிறது. அதுபோல் விளையாட்டு போல் நீ எனக்கு விடாத துன்பம் தந்தாலும் உனக்கு அடிமை செய்ய உன் அருளையே எதிர்பார்த்துக் காத்திருப்பேன்' என்று வித்துவக்கோட்டில் உள்ள பெருமானிடம் சொல்கிறார்.

வித்துவக்கோடு கேரளத்தில் பட்டாம்பியிலிருந்து ஒரு மைல் தூரத்தில் இருக்கும் உய்யவந்த பெருமாள் கோயில் என்று சொல்கிறார்கள். இதை இன்று தேடிச் சென்று கண்டுபிடிக்க முடிந்தால் குலசேகரன் என்ற மன்னனையும் இந்த அருமையான பாடலையும் நினைத்துக் கொள்ளலாம்.

வாளால் அறுத்துச் சூடுபோட்டு! அனஸ்தீஸியா வரும்வரை ஜனங்கள் பெருமாளை நினைத்துக்கொண்டுதான் வலியைத் தாங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

(படிக்கலாம்)



# சமாளித்தே தீர வேண்டும்!

யௌவனம், வாலிபம் என்பது உணர்ச்சி வேகங்கள் கட்டறுத்துக் கொண்டு புரளுகிற பருவம். தற்காலத்தில் மிதமிஞ்சிய சக்தியுடன் சர்வ ஜனங்களின் மேலும் ஆளுகை செலுத்திக் கொண்டிருக்கிற அரசியல், சினிமா, பத்திரிகைகள், விளையாட்டு ஆகியவை அத்தனை பேரையுமே உணர்ச்சி வேகங்களில் தூண்டிவிட்டுக் கொண்டிருக்கையில், தன்னியற்கையாக வேறு அந்த வேகங்களின் எழுச்சிக்கு ஆளாகியிருக்கிற வாலிப வயசு மாணவர்கள் - கல்லூரிகளில் படித்துக் கொண்டிருப்பவர்கள் - ஒழுங்கு முறைகளுக்குக் கட்டுப்பட்டிருப்பது இரண்டு பங்கு (மடங்கு) சிரமம் தான்! ஆனாலும் தங்களுடைய சொந்த எதிர்காலத்துக்கான வளர்ச்சியை முன்னிட்டு அவர்கள் இந்தச் சிரமத்தைச் சமாளித்தே தீர வேண்டும். அதிலேதான் தேசத்தின் தற்கால அமைதி, எதிர்கால அமைதி ஆகியவையும் அடங்கியிருக்கின்றன. வாலிப வயசுக்காரர்கள் கட்டுப்பாடு இழந்தால் அவர்களும் கெட்டுப்போய், வீட்டிலும் அமைதி குலைந்து, நாட்டிலும் அமைதியின்மையே அடிவேர்வரை பரவிக் கெடுத்துவிடும்.

கட்டறுத்துப் புரளுகிற இந்த உணர்ச்சி வெள்ளத்துக்கு அணைபோட்டு வைப்பதற்காகத்தான் நம்முடைய முன்னோர்களான பெரியவர்கள் பாலப் பிராயத்தில் அக்ஷராப்யாஸம் ஆன நாளிலிருந்து தெய்வ பக்தியையும், குரு பக்தியையும், அந்த பக்தியிலிருந்து விளைகிற விநயம் என்கிற அடக்க குணப் பண்பையும் விதித்து, குருகுலத்தில் அதைப் பசங்களுக்கு நடைமுறையாக்கிக் கொடுத்தார்கள்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

## அருள்வாக்கு




**24.6.2007 முதல் 30.6.2007 வரை...**

**மேஷம்:** உடல்நிலை சீராகும். இடமாற்றம் உண்டாகும். வேலையில் முன்னேற்றம் ஏற்படும். பணப் பற்றாக்குறை தீரும். கல்வியில் முற்போக்கான சூழ்நிலை ஏற்படும். பூர்வீகச் சொத்து கைக்கு வந்து சேரும். திருமணக் காரியம் கைகூடும்.

**ரிஷபம்:** ஆடை ஆபரண அலங்காரப் பொருட்கள் வாங்குவீர்கள். வீடு / மனை வாங்க உகந்த காலம். பொறுப்புள்ள பதவி கிடைக்கும். நண்பர் / உறவினர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். திருமணம் கைகூடும். குழந்தை பாக்கியம் கிட்டும். மன தைரியம் மிகுந்து காணும். வேலையில் உயர்வு ஏற்படும்.

**மிதுனம்:** பொருளாதாரம், கல்வி வளம் மேலோங்கும். வெளிநாட்டு அழைப்பு கிட்டும். நண்பர் / உறவினர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும்.

**கடகம்:** எதிலும் கவனமாகச் செயல்படுவது நற்பலனை அளிக்கும். திருமணக் காரியம் கைகூடும். கூட்டாளிகள் விலக நேரிடும். வீடு / மனை வழியில் ஆதாயம் உண்டாகும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். உடல் நிலையில் கவனம் தேவை.

**சிம்மம்:** மனக் குழப்பத்திலிருந்து விடுதலை கிடைக்கும். அனாவசியமான செலவுகள் குறையும். உடல்நிலை சற்று பாதிக்கும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வந்தால் நற்பலன் உண்டாகும். வேலையில் தொந்தரவுகள் இருக்கும். நீண்டதூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வியாபாரத்தில் சற்று முற்போக்கான சூழ்நிலை உருவாகும்.

**கன்னி:** பண வசதி பெருகும். படிப்பு மேலோங்கும். மனச் சலனம் தீரும். திருமணக் காரியம் கைகூடும். உத்தியோ

# நடக்குமென்பார்; நடக்கும்!

## தஞ்சை பரத்வாஜ்

கத்தில் நற்பெயர் ஏற்படும். புதிய தொழில் முயற்சி நற் பலனை அளிக்கும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். வராத நிலுவைகள் வசூலாகும்.

**துலாம்:** இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். ஆபரணப் பொருட்கள் சேரும். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். மனச் சலனம் தீரும். பூர்வீகச் சொத்து கைக்கு வந்து சேரும். குழந்தை பாக்கியம் உண்டா கும். உத்தியோகத்தில் இட மாற்றம் ஏற்படும். புதிய தொழில் முயற்சி சற்றுத் தள்ளிப் போகும்.

**விருச்சிகம்:** உத்தியோ கத்தில் இட மாற்றம் ஏற் படும். திருமணம் கைகூடும். பொருளாதார முன்னேற்றம் ஏற்படும். அந்நிய நாட்டு மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். கல்வி வளம் மேலோங்கும். சிக்கல்கள் தீரும்.

**தனுசு:** நீண்ட நாட்களுக்குப் பிறகு வசந்த காலம் துவங்கி இருக்கிறது. தடை விலகித் திருமணம் கைகூடும். வேலையில் நல்ல பெயர் கிட்டும். செலவுகள் சுபமானதாக இருக்கும். கல்வி வளம் சிறப்பு பெறும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும்.

**மகரம்:** சுப நிகழ்ச்சி கைகூடும். கல்வி வளம் சிறப்பு பெறும். வீடு / மனை வழியில் ஆதாயம் அடைவீர்கள். வேலைப் பளு அதிகரிக்கும். கடன் தொல்லை தீரும். மறைமுக சத்ருக்கள் இருப்பார்கள். உணவுக் கட்டுப்பாடு அவசியம். உடல் நிலையில் கவனம் தேவை.

**கும்பம்:** நீண்ட தூர பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வீடு மாற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். மேல் கல்விக்கு வெளிநாடு சென்று படிக்கும் யோகம் கிட்டும். உடல்நிலை சீராகும்.

**மீனம்:** செல்வ வளம் மேலோங்கும். சுப நிகழ்ச்சிகள் நடக்கும். வாக்கு வன்மை மேலோங்கும். மனச் சலனம் விலகும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். குழந்தை பாக்கியம் கிட்டும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். புதிய முயற்சி வெற்றி பெறும். பணக் கஷ்டம் இருக்காது.

### பரத்வாஜ் பதில்கள்

● *என் மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்? தோஷம் உண்டா?*

- ஆர்.கோபால், சென்னை - 80

உங்கள் மகன் ஜாதகப்படி 32 வயதில் திருமணம் முடியும். சர்ப்பதோஷம் உள்ள வரனாகப் பார்க்கவும். படித்த, பண்புள்ள வேலையில் உள்ள பெண் அமையும்.

● *என் மகளுக்கு 1999-ல் திருமணம் நடைபெற்றது. இதுவரை குழந்தை பாக்கியம் இல்லை. எதிர்காலத்தில் வாய்ப்பு உண்டா?*

- நாராயணமூர்த்தி, திருப்பத்தூர்

உங்கள் பெண்ணுக்கு குருதசை நடைபெற்று வருகிறது. குருதசை முடிந்து சனிதசை சனிபுத்தியில் குழந்தை பிறக்கும். ஆயில்யம் அல்லது கேட்டை அல்லது ரேவதி நட்சத்திரத்தில் ஆண் குழந்தை பிறக்கும்.

உங்கள் மாப்பிள்ளைக்கு புதன் தசை நடைபெற்று வருகிறது. வெளிநாடு சென்று வேலை செய்யும் யோகம் உள்ளது. கடன் தொல்லை 2010-ல் முடியும்.

சர்வஜித் போட்டி எண் 4-ல் பங்கேற்று, 'படிக்கும் வயதில் காதலிக்கலாமா?' என்கிற கேள்விக்கு பதில் எழுதி, ஆறுதல் பரிசாக ரிஸ்ட் வாட்ச் பெறும் வாசக அனுபவங்கள்...

# கல்வியா... காதலா?

**க**ல்வியைக் கற்கும் காலத்தில் காதலையும் கற்கலாம். அதாவது அதைப் பற்றி அறிந்து மட்டும் வைத்துக் கொள்ளலாம். மாறாகப் படிக்கும் காலத்தில் அதனைச் செயல்படுத்த விரும்பினால் படிக்க வந்ததன் நோக்கம் கெட்டு விடாமல் காதலிக்க வேண்டும். நிறைய பேர் இதில் கோட்டை விடுகிறார்கள். காதலினால் படிப்பைத் தொலைத்துவிட்டு, கடைசியில் காதலையும் இழந்து விடுகிறார்கள்.







பின்பு அதுவே நமக்குப் பாடம் கற்பித்துவிடும். கற்கும் வயதில் கவனம் காதலுக்குத் திரும்பினால் கல்வியும் தோல்வியடையும்; அதனால் காதலும் தோல்வியடையும்.

- சு.கௌரி, சென்னை - 45

**டீ**ன் ஏஜ் வயதில் காதலிக்காமல் வேறு எப்போது காதலிப்பதாம்? ஆனால், படிக்கும் வயதில் காதலிக்கும்போது குறிப்பிட்ட சிலரே படிக்கும் வயதில் படிப்பிலும் காதலிலும் ஒரு சேர ஜெயிக்கிறார்கள். அதற்கு மிகச் சிறந்த உதாரணம் அமரர் ராஜீவும், சோனியா காந்தியும்தான். இவர்கள் இருவரும் இங்கிலாந்தில் படித்துக் கொண்டே காதலித்தார்கள். காதலித்துக் கொண்டே படிப்பை முடித்தார்கள். அந்த மனப்பக்குவமும், புரிந்து கொள்ளும் தன்மையும் இருந்



தால் படித்துக்கொண்டே காதலில் ஜெயிக்கலாம்.

- சி.வெங்கடேசன்,
மேட்டூர் அணை

**கா**தல் பொறுப்புணர்வு சம்பந்தப்பட்ட விஷயம். மனமுதிர்ச்சியின் மூலம் மட்டுமே அதனைச் சரியான பாதையில் எடுத்துச் செல்ல முடியும். 'இளமையில் மனம் அலைபாய்வதற்கு டி.எச்.பி. என்ற ஹார்மோன்தான் காரணம். இந்த ஹார்மோன் பெரியவர்களுக்கு அமைதியைக் கொடுக்கிறது. இளைஞர்களுக்கு அமைதியின்மையைக் கொடுக்கிறது' என்று நியூயார்க் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர்.

மாணவர்களுக்காக மூன்று அம்சங்களைச் சொல்லியிருக்கிறார் மாமேதை லெனின். ''மாணவர்களே 1.படியுங்கள், 2.படியுங்கள், 3.படியுங்கள்.''

- கே.சசிகலா,
திருவாரூர்

**ப**டிக்கும் வயதில் காதலிக்கலாம்-புத்தகங்களை; வர்ணஜாலம் காட்டும் வகுப்புகளை; 'வானம் தொட்டுவிடும் தூரம்'தானென உணர்த்தும் துறைகளின் மகத்தான வளர்ச்சியினை. 'உன்னை உண்மையிலேயே விரும்புகிறவனா... கடைசிவரை வைத்துக் காப்பாற்றுவானா?' என வினவும் மானுடக் காதலின் வழக்கத்துக்கு 'இறுதிவரை கைவிடாதது கல்வி' என்ற பதில் 'காதல்' வளர்க்கும். நம்பிக்கை ஒளிக்கீற்றினைப் பாய்ச்சும் கல்வியை நம்பிக் கழுத்தை நீட்டலாம். பிள்ளைப் பேறுக்குப் பின்பும் பெறலாம் இப்பேறு. புதுப்புது சுகானுபவங்களின் சுரங்கம். சுசக்காத காதல் அரங்கம். காதலின் கௌரவம் கல்விதானே!

- எஸ்.வைஷ்ணவி,
திருச்சி




**சி**னிமா, டி.வி., கிரிக்கெட் என படிப்புக்கு ஏற்கெனவே ஏகப்பட்ட இடைஞ்சல்கள்! காதல் தேவைதானா? பள்ளி இறுதியாண்டில் விடிய விடிய கண் விழித்துப் படித்து, வரிசையில் நின்று, கடன்பட்டு, பல லட்சம் செலவழிப்பது நம் எதிர்காலத்துக்கா அல்லது யாரோ விரிக்கும் மாய வலைக்காகவா? அப்பா, அம்மா தரும் பாக்கெட் மணியில் காதலை வளர்ப்பதைவிட நம் சுய சம்பாத்தியத்தில் காதலை வளர்ப்பதுதான் பெருமை!

- எம்.விக்னேஷ்,
மதுரை - 9



# புடிச்சு விட்டுடுமா



"தலைவரோட வேட்டி ஏன் இவ்ளோ அழுக்கா இருக்கு?"

"கால்ல விழறவங்க அப்படியே முகத்தையும் துடைச்சுட்டுப் போயிட றாங்களாம்."



"உன் வீட்டுத் தரை முழுதும் கோடு கிழிச்சிருக்கே...ஏன்?"

"வீட்ல எல்லார்கிட்டயும் செல் இருந்தாலும் லேண்ட் லைன் அவசி யம்னு என் மனைவி சொன்னா!"

- அம்பை தேவா



"ஏழாவது வீட்டிலிருந்து சூரியன் உங்களைப் பார்க்கறான். எட்டாவது வீட்டிலிருந்து ராகுவும், நான்காம் வீட்டி லிருந்து சந்திரனும் பார்க்கறாங்கம்மா..."

"அப்ப கொஞ்சம் இருங்க ஜோசியரே... மேக்-அப் பண்ணிட்டு வந்துடறேன்."

- சாயம்.வெ.ராஜாராமன்

"யாரங்கேன்னு குரல் கேட்டதும் நம்மை யெல்லாம் தள்ளி விட்டுட்டு மன்னர் இவ்வளவு வேகமா ஓடுகிறாரே... ஏன்?"

"கூப்பிடுறது மகாராணியாச்சே!"

- பி.சிவஞானம்



# அத்தே?



"ஒரு வாரமா கழுத்து வலிக்குதும்மா!"

"நான் புடிச்சு விட்டுடுமா அத்தே?"

"நீ புடிச்சா விடமாட்டியே!"

- லீலாஜி

"எதிர்வீட்டு முனுசாமி மகன் என்னையே எப்பப் பார்த்தாலும் முறைக்கிறாம்பா!"

"அவசரப்படாதே! காலையில அவன் அப்பன்கிட்டே ஜாதகம் கேட்டுப் பார்க்கிறேன்!"





"சேர்ந்து பாடுவோம் நிகழ்ச்சியில் எல்லாரும் ஏன் ஜீவனேயில்லாம பாடறாங்க?"

"சோர்ந்து பாடுவோம் நிகழ்ச்சியோ என்னவோ!"

- பம்மல் நாகராஜன்

"தினசரி என் கனவில் அமரர் ஊர்தி வந்துக்கிட்டிருக்கு டாக்டர்!"

"நானே உனக்குச் செய்யப் போற ஆபரேஷனை நினைச்சு நடுங்கிக்கிட்டிருக்கேன்... நீ வேற எதுக்குய்யா அதையும் இதையும் சொல்லி என் தன்னம்பிக்கையைக் குலைக்கிறே?"

- உ.ராஜாஜி









# புகுந்து விளையாடிய புள்ளிமான்கள்

'லிட்டில் ஸ்டுடியோ' என்ற பெயரில் குட்டீஸ்களுக்கு ஓவியம் வரையக் கற்றுத் தரும் வகுப்புகளை, கடந்த ஆறேழு வருடங்களாக சென்னையில் நடத்திக் கொண்டிருக்கிறார் ப்ரியா. சின்ன வயசிலிருந்தே இவருக்கு ஓவியங்கள் வரைவதில் ஆர்வம். ஓவியப் பள்ளி எதிலும் சேர்ந்து படிக்காதவர், சுயமாக வரையக் கற்றுக்கொண்ட பிறகு, ஓவிய ஆசிரியரிடம் நுணுக்கங்களைத் தெரிந்துகொண்டு தம் திறமையை மெருகூட்டிக் கொண்டவர்.

''கோயில்களைக் கறுப்பு, வெள்ளையில் கோட்டுச் சித்திரங்களாக வரைவதுதான் என் ஸ்பெஷாலிட்டி. ஓவியர் சில்பிதான் என்னுடைய மானசீக குரு!'' என்கிறார் ப்ரியா. தம்மிடம் ஓவியம் கற்றுக் கொண்ட வாண்டுகளின் ஓவியங்களை வைத்து அண்மையில் ஒரு கண்காட்சிக்கு

✱ ப்ரியா





ஏற்பாடு செய்திருந்தார். குழந்தைகளே அழகுதான்; அதிலும் இந்தக் குழந்தைகள் வரைந்த ஓவியங்கள் கொள்ளை அழகு! பென்சில் டிராயிங், வாட்டர் கலர், ஆயில் பெயின்ட்டிங் என்று வரையப்பட்டிருந்த சித்திரங்களுக்குப் பார்வையாளர்கள் மத்தியில் ஏக கரகோஷம்!

''உடம்பு சரியில்லை என்று சொல்லிப் பள்ளிக்கூடத்துக்கு மட்டம் போட்டுவிட்டால் கூட, என் ஸ்டூடண்ட்ஸ் ஓவிய வகுப்பை மிஸ் பண்ண மாட்டார்கள்'' என்று மகிழ்ச்சியுடன் சொல்லும் ப்ரியா, குழந்தைகளுக்கு ஓவியம் வரையச் சொல்லிக் கொடுக்கும் ஸ்டைலே தனி. பள்ளிக்கூட ஓவிய வகுப்புபோல கரும் பலகையில் படத்தை வரைந்துவிட்டு அதைப் பார்த்து மாணவர்களை வரையச் சொல்வதில்லை. பென்சிலை எப்படிப் பிடித்துக்கொண்டு வரைவது என்பதில் தொடங்கி, ஆயில் பெயின்டுகளைப் பயன்படுத்தும்போது எப்படி ஒன்றுக்கு மேற்பட்ட வர்ணங்களைக் குழைத்து, வேண்டிய வர்ணத்தைப் பெறுவது என்பது வரையிலான எல்லா நுணுக்கங்களையும் சொல்லிக் கொடுக்கிறார். ஒரு குறிப்பிட்ட சப்ஜெக்டைக் கொடுத்து, அதனை எப்படி வரைவது என்பதைக் குழந்தைகளின் கற்பனைக்கே விட்டு விடுகிறார்.





சுதந்திரமென்றால் ஜாலிதானே குட்டீஸ்களுக்கு! புகுந்து விளையாடித் தம் திறமையை வெளிப்படுத்துகின்றன இந்தப் புள்ளிமான்கள். பல ஓவியங்கள் பிரபல ஓவியர்கள் வரைந்ததுபோல் தத்ரூபமாய் இருப்பது ஆச்சர்யம்.

''குழந்தைகளைச் சாதாரணமாக யாரும் எடைபோடத் தேவையில்லை. அவர்களிடம் ஏரானமான திறமைகள் ஒளிந்திருக்கின்றன. அவற்றுள் ஒரு சிறு அளவை வெளிக் கொணர்வதில் எனக்குப் பெருமைதான்'' என்கிறார் ப்ரியா.

- கௌதம்ராம்

# சட்டப்படி சித்திரவதை

'**வா,** விசாரிக்க வேண்டும்' என்று சொல்லி அதிகாரிகள் திடீரென்று வருவார்கள். கூண்டிலிருந்து வெளியில் கொண்டு வருவார்கள். உடைகளைக் களையச் சொல்வார்கள். மாறி மாறி அடிப்பார்கள்-விசாரணை!

ஆறடிக்கு எட்டடி. அதை அறை என்றும் சொல்லலாம். சிறை என்றும் சொல்லலாம். அல்லது, உலகம் என்றும் சொல்லலாம். உள்ளே அடைபட்டுக் கிடப்பவர்களுக்கு வேறு மார்க்கம் இல்லை. முழுக்க முழுக்க எஃகினால் வடிவமைக்கப்பட்ட கூண்டு அது. கதவு, கட்டில், கழிப்பறை, கூரை எல்லாமே எஃகு!




ஒரு நாளைக்கு இரண்டு மணி நேரம் எஃகு அறையிலிருந்து வெளியில் வரலாம். வெளியில் என்றால் இன்னொரு அறைக்கு. ஆறரைக்குப் பதினாறரை அடிகள் கொண்ட கூண்டு அது.

க்யூபாவில் அமெரிக்காவுக்குச் சொந்தமான கடற்படைத் தளம் ஒன்று உண்டு. குவான்ட்டநாமோ கேம்ப் (Guantanamo Camp) இருப்பது இங்கேதான். அதில்தான் இந்த நிலை!

இதைச் சிறைச்சாலை என்றுகூட அழைக்கக் கூடாது. அமெரிக்கா சண்டைக்கு வந்துவிடும். விசாரணைக் கூடமாம். அல்கொய்தா, தாலிபான் மற்றும் இன்னபிற தீவிரவாத இயக்கங்களைச் சேர்ந்தவர்களைப் பிடித்து வந்து அடைத்து வைத்திருக்கிறார்களாம். விசாரணை முடியும் வரை மட்டுமே அவர்களை வைத்திருப்பார்களாம்.

டிஃபன் பாக்ஸ், பிஸ்கட், பழம் எடுத்துக் கொண்டு சொந்தக்காரர்கள் யாரும் உள்ளே வரக் கூடாது. தபால் எழுதி அனுப்பலாம். சில மாதங்களுக்கு அல்லது வருடங்களுக்குப் பிறகு போய்ச் சேரலாம்; அல்லது சேராமலேயே போகலாம். உள்ளே வரும் கடிதங்களும் கூட அப்படித்தான். வெட்டி, ஒட்டிதான் வரும்- ஒரு வேளை வந்தால்.

‘நான் இங்கே வந்து எத்தனை ஆண்டுகள் ஆகின்றன என்றே எனக்குத் தெரியவில்லை. நித்தம் நித்தம் கூட்டி வைத்து அடிக்கிறார்கள். இதுவரை ஒரு முறைகூட நான் நீதிமன்றத்துக்குச் சென்றதில்லை. நான் நிரபராதி என்று ஒருவருக்கும் தெரியப் போவதுமில்லை'- பிரிட்டனிலிருந்து அள்ளிப் போட்டுக்கொண்டு வரப்பட்ட ஜமில் எல் பன்னாவின் வேதனையைக் கேட்க ஒருவரும் இல்லை.

ஜமில் என்றில்லை; குவான்ட்டநாமோவில் உள்ள எல்லாக் கைதிகளுக்கும் இந்த நிலைதான்!

ஒரு நாற்காலியில் உட்கார வைப்பார்கள். கண்கள் செருகித் தலை சாயும்வரை காத்திருப்பார்கள். பிறகு பளீரென்று கன்னத்தில் ஓர் அறை விழும். அதிர்ந்து போய் நிமிர்ந்து உட்காரும் வரை காத்திருப்பார்கள். மீண்டும் அசதியுடன் கண்களை மூடும்போது, துப்பாக்கிக் கட்டையால் மண்டையில் இடிப்பார்கள். தொடர்ந்து பல மாதங்கள் தூங்க விடாமல் இப்படியே அலைக்கழிப்பார்கள்.

நாள் கணக்கில், வாரக்கணக்கில் பட்டினி போடுவார்கள். திடீரென்று ஒரு நாள் ரொட்டித் துண்டை வீசி எறிவார்கள்- நாய்களுக்கு வீசுவதைப்போல! பாய்ந்து வந்து ரொட்டியைப் பிடுங்கும்போது குச்சியால் தட்டிவிட்டுக் கத்துவார்கள்: 'உனக்கும் அல்கொய்தாவுக்கும் தொடர்பு இருக்கிறதா இல்லையா?' 'ஆமாம், ஆமாம், ஆமாம்' என்று கத்தலாம்போல் தோன்றும்.

மேற்படி சமாசாரங்கள் சாம்பிள்கள் மட்டுமே. இன்னமும் பல புதுப்புது டெக்னிக்குகள் உள்ளன. மனநோய் முற்றிப் போகும் வரைக்கும் சித்ரவதைகள் தொடரும். 'உண்மையை ஒப்புக்கறேன். நான்தான் ஓசாமா பின்லேடன்' என்று அடி வயிற்றிலிருந்து பேயாகக் கத்தும் வரை ஓய மாட்டார்கள்.

# செய்யலாம்!

இஸ்லாம் தற்கொலைக்கு எதிரானது. ஆனால், யாரும் அதைப் பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. தினமும் ஒருவர் தற்கொலைக்கு முயல்கிறார். 'இறந்த பிறகு அல்ல. இப்போதே என்னைக் குழியில் தள்ளிப் புதைத்து விட்டதைப் போல் தோன்றுகிறது' என்கிறார் அஹமத் பெல் பாச்சா.



புஷ் நடத்திக் கொண்டிருக்கும் 'தீவிர வாதத்துக்கு எதிரான போர்' நாளுக்கு நாள் வலிமையடைந்து கொண்டே போகிறது. விசாரணை முறைகள் ஒவ்வொன்றும் கொடூரமாக, விகாரமாக

**மருதன்**



மாறிக் கொண்டிருக்கின்றன. 'இதெல்லாம் டார்ச்சர் கிடையாது, சற்றுத் தீவிரமான விசாரணை அவ்வளவுதான்!' என்று சொல்லித் தோளைக் குலுக்கிக் கொள்கிறார் புஷ்.

இவ்வளவு சிரமப்பட்டு அவர் எதற்காக இந்த விசாரணைகளைச் செய்கிறார் தெரியுமா? உலகிலுள்ள தீவிரவாதிகள் அத்தனை பேரும் அமெரிக்காவையே சுற்றிச் சுற்றி வருகிறார்களாம். அதனால்தான் சி.ஐ.ஏ., இராணுவம், காவல்துறை எல்லாவற்றையும் களத்தில் இறக்கியிருக்கிறாராம்.

சரி, அத்தனை இயக்கங்களும் அமெரிக்காவைக் குறி வைப்பது ஏன்? இதோ புஷ் தரும் விளக்கம்: 'அமெரிக்கா ஓர் அமைதியான நாடு; சுதந்திரத்தை, ஜனநாயகத்தை நேசிக்கும் நாடு. எனவே, யாருக்கும் அமெரிக்காவைப் பிடிக்கவில்லை. அமெரிக்காவை, அமெரிக்கர்களைச் சிதைக்க நினைக்கிறார்கள். எந்தத் தீவிரவாதியாவது தன்னைத் தீவிரவாதி என்று ஒப்புக்கொள்வானா? அதனால்தான் இந்த விசேஷ விசாரணைகள்.'

இதற்கு வசதியாக அமெரிக்கச் சட்டத்தில் சில முக்கிய திருத்தங்களை அமல்படுத்தியுள்ளார் புஷ். தி மிலிட்டரி கமிஷன் சட்டம் (The Military Commision Act of 2006) என்று அதற்குப் பெயர். இதன்படி சந்தேகத்தின் பெயரில் யாரை வேண்டுமானாலும் உள்ளே தள்ளலாம். எப்படி வேண்டுமானாலும் விசாரிக்கலாம். அல்லது விசாரிக்காமலேயே ஒருவரது மண்டையை உடைக்கலாம். ஜெனிவா, ஐ.நா., மனித உரிமை, மண்ணாங்கட்டி எதுவும் ஒன்றும் செய்ய முடியாது. அத்தனையும் சட்டபூர்வமாக்கப்பட்டுவிட்டன. யார்யாரை எப்படியெப்படி சித்திரவதை செய்யலாம் என்று முடிவெடுக்கும் தகுதியை அமெரிக்க செனட், திருவாளர் புஷ்ஷுக்கு வழங்கிவிட்டது.

இதைவிட கொடுமை, பில் ஆஃப் ரைட் (Bill of Right) என்று சொல்லப்படும் அடிப்படை உரிமையை ரத்து செய்தது. Habeas Corpus என்று சொல்வார்கள்- விசாரணைக்கென கைது செய்யப்பட்டவரை

> **யாரை வேண்டுமானாலும் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். ஐந்தாயிரம் வருடம் பின்னோக்கிப் போனால் கூட இப்படிப்பட்ட மிருகத்தனமான சட்டத்தைப் பார்க்க முடியாது.**

கோர்ட்டில் ஆஜர்படுத்தக் கோரும் அவசர மனு - அதை அப்படியே கசக்கிக் குப்பைத் தொட்டியில் போட்டு விட்டார் புஷ். யாரை வேண்டுமானாலும் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். ஐந்தாயிரம் ஆண்டுகள் பின்னோக்கிப் போனால் கூட இப்படிப்பட்ட மிருகத்தன்மான சட்டத்தைப் பார்க்க முடியாது. ●

# கன்னத்தில் அறையும் கவிதைகள்!

**மண்ணே மலர்ந்து மணக்கிறது, மகுடேசுவரன், யுனைடெட் ரைட்டர்ஸ், 63, பீட்டர்ஸ் சாலை, ராயப்பேட்டை, சென்னை - 14. விலை ரூ. 35.00**

மணக்கும் கவிதைத் தொகுப்பு. 'என் குட்டி இளவரசி' கவிதை எந்தவொரு தகப்பனையும் ததும்ப வைக்கக்கூடியது. 'சோற்றுக்குப் பள்ளி சென்றேன் - உபரி அறிமுகந்தான் உயிரெழுத்து' என்று கன்னத்தில் அறையும்போதே 'ஒரு சாவி கூட இல்லை' என்று திடுக்கிட வைக்கிறார். ஆடவருக்கு மத்தியில் தன்னந்தனியாய், பிற மொழிப் படம் பார்க்க வந்த பெண்ணைப் பற்றிய கவிதையின் கடைசி வரிகள் முத்தாய்ப் பானவை. போன தொகுப்பு போல் இல்லாது இந்த முறை எளிமையைக் கடைப்பிடித் திருக்கிறார் மகுடேசுவரன் - இனிமையாக.

**ஸ்..!, முகில், கிழக்குப் பதிப்பகம், 33/15, இரண்டாவது தளம், எல்டாம்ஸ் சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 18. விலை ரூ. 75.00**

பனிக் கண்டமான அண்டார்டிகாவை அக்குவேறு ஆணிவேறாக அலசும் புத்தகம். படிக்கப் படிக்க புத்தகமெங்கும் பனிப் பிரதேச ஜிலீர்! பலரின் அனுபவங்களையும் பதிவுசெய்திருப்பது கூடுதல் சிறப்பு. நடந்த, நடந்து வரும் ஆராய்ச்சிகள் குறித்த தகவல்கள் பிரமிப்பை ஏற்படுத்து கின்றன.

**விசும்பு (அறிவியல் புனைகதைகள்), ஜெயமோகன், எனி இந்தியன் பதிப்பகம், 57, பி.எம்.ஜி. காம்ப்ளெக்ஸ், தெற்கு உஸ்மான் சாலை, தி. நகர், சென்னை - 17. விலை ரூ. 85.00**

சுஜாதாவுக்கு இந் நூலைச் சமர்ப்பணம் செய்திருக்கிறார் ஜெயமோகன். விறுவிறுப் பான நடை கதைகளைச் சுவையுடன் நகர்த்திச் செல்கிறது. 'சமூக, தத்துவ அடிப்படைகளில் இயங்கும் கதைகள்' என்று பதிப்பகத்தார் கூறியிருப்பது மெய்யே. முதல் கதையான 'ஐந்தாவது மருந்தில்' ஆரம்பித்து 'குரல்' வரையிலும் அதற்கான சாத்தியக்கூறுகள் விரவிக் கிடக்கின்றன. அறிவியல் புனை கதைகள் வரிசையில் முக்கியமான நூல்.

**அழகு, வசுந்தரா, விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002. விலை ரூ. 130.**

ஃபேஷியல் தொடங்கி கூந்தல் பராமரிப்பு வரையிலான பெண்களுக்கான அழகு ஆலோசனைகள் புத்தகம் முழுக்க கொட்டிக் கிடக்கின்றன. எந்தவொரு விஷயத்தையும் மேலோட்டமாக இல்லாமல் ஆழம்வரை சென்று அலசியிருப்பது பாசிட்டிவ்வான அணுகுமுறை.

- மதுமிதா

# அம்சவல்லியின்

"அட்டெண்டன்சிலே பார்த்தா சாந்தான்னு பேரு இருக்கு. வீட்டுக்கு வந்தா அம்சவல்லின்னு கூப்பிடுறாங்க. என்ன தான் உன் பேரு?"

"அதாங்..." நாக்கை நாசூக்காய்ச் சுழற்றி ஒரு சப்புக்கொட்டி, "எங்க பாட்டி ரொம்ப நல்லவங்க தணி..."

என் பெயர் தணிகைநாதன்.

"எல்லார்கிட்டேயும் உசிரா இருப்பாங்க. அதனால அவங்க நினைவா அம்ச வல்லின்னு எனக்குப் பேர் வைக்கணும்னு தான் எல்லாருக்கும் ஆசை. ஆனா... வெளி யிலே கொஞ்சம் புதுசா இருக்கணும்ங் கறதுக்காக சாந்தான்னு பேரு பதிவு பண்ணிட்டாங்க."

நான் மௌனமாய்ப் பார்த்தேன்.

"ஏன் உம்முன்னு ஆயிட்டீங்க?"

"ம்... எனக்கென்னமோ அம்சவல்லி தான் அழகாத் தோணுது, அம்சம்"

"அ...அ...ப்...ப..டியா...?"

ஏக்கமான அந்தப் பார்வை.... அவள் உடம்பு முழுக்க அப்போது ஒளிந்து விளை யாடிய அந்த நாணச் சிரிப்பு... இன்னும் அப்படியே என் கண்களில் சிந்தாமல் சிதறாமல்...

அது 1962. என் வாழ்க்கையின் வசந்த காலம்.

பள்ளிப் படிப்பை முடித்திருந்தேன். பட்டுக்கோட்டை நகராட்சியில் கொசு மருந்து அடிக்கக் கூப்பிட்டார்கள்; ஓடினேன்.

காதலின் நடுப்பக்கம் கண்ணீர் என்ற நியதி என்னை அடித்துப் போட்டது அப் போதுதான். மணிக்கூண்டு நாற்சந்தியில் குருதிப்படலமாயிற்று என் காதல். ஆம்; கவனம் சிதறிய என் இடக் காலில் கும்ப கோணம் பேருந்து குதிரை தாண்டி விட்டது.

"பரவாயில்லை; எடுக்கப்பட்ட இடக் காலாக நான் இருக்கிறேன்" என்றாள் அம்ச வல்லி.

"ஆமாம் தம்பி. பொண்ணு உங்க மேலே உசிரையே வச்சிருக்கா. எனக்கும் அதுதான் சரியாத் தோணுது" தழுதழுத்தார் மாசிலா மணி மாமா.

எனக்கு?

மனம் ஒப்புக் கொள்ளவில்லை.

இளமையும் காதலும் உணர்ச்சி வேகத் துடிப்புகள். வாலிபம் காலியாகும்போது உண்மை களைத்துப் போகலாம்.

'நொண்டிக்கு வாழ்க்கைப்பட்டோமே ...' என்று அவளும்,

'சின்ன வயசிலே பெண்ணுக்குத்தான் ஆசை கண்ணை மறைச்சுடுச்சு. என் புத்தியும் அப்போது மாடு மேயப் போயிடுச்சே'ன்னு பெரியவரும் புலம்ப நேர்ந்தால்...

நிம்மதி நிர்மூலமாகும்.

என் கதி...

சமாதியா, சரணாகதியா?

வேண்டாம்... வேண்டவே வேண்டாம்.

என்னை வற்புறுத்தித் தோற்றுப் போனார் கள் அப்பாவும் மகளும்.

அம்சவல்லி வேத மூர்த்தியின் உடை மையானாள்.

நான் தங்க ரத்தினத்துக்குத் தாலி கட்டி னேன்.

பட்டுக்கோட் டைக்குப் பிறகு பேராவூரணி, நீடாமங்கலம், தலை ஞாயிறு, தஞ்சாவூர் என்று ஊர் சுற்றி, இறுதி



# காதல்!

தமிழினியன்

யில் திருச்சிராப்பள்ளியில் அடைக் கலமானேன். நாற்பது ஆண்டுகள் ஓடிய ஓட்டம் தெரியவில்லை.

ஊருக்குப் போகும் சந்தர்ப்பங் களில் அம்சவல்லியை விசாரிப் பேன். எடையூர், நெடும்பலம் என்று ஏதேதோ ஊர்களில் ஆசிரியை யாக இருப்பதாகச் சொல்வார்கள்.

நாளடைவில் என் வயசுகளில் பாதி காலாவதியாகிவிட்டன; மீதி கண் விளங் காமல் தடுமாறின. விசாரிக்க முடிய வில்லை; விசாரித்தாலும் விடை கிடைக்கவில்லை.



சென்ற மாதம் திருவாரூரில் நடந்த ஒரு கல்யாணத்துக்குப் போயிருந்தபோது சுந்தரமூர்த்தி சொன்னான்: 'உன் அம்சவல்லி திருச்சியில்தாம்பா இருக் கிறாள். என்ன மாயமந்திரம் பண்ணி னாளோ தெரியவில்லை. சாதாரணமா டிஸ்ட்ரிக்ட் விட்டு டிஸ்ட்ரிக்ட் டீச்சருங்களை மாற்ற மாட் டாங்க. உன் ஆளு எப்படியோ

# எங்கு தேடியும் அம்சவல்லி கிடைக்கவில்லை. கடைசியில் அவன் அவளைக் கண்டெடுத்தது...

டிரான்ஸ்ஃபர் வாங்கிட்டு அங்கே வந்துட்டா பார்த்துக்க...'

அன்று முதல் சாந்தாவைத் தேடும் எனக்கு இனி ஒன்றும் ஆகப் போவதில்லைதான். பரஸ்பரம் பார்த்துக் கொள்ளலாமே. கட்டைக் கால் பொருத்தி நான் இயல்பாய் நடப்பதைக் காட்டிக் கொள்ளலாமே. அன்று என் நிலை கண்டு பரிதாபக் கிணற்றில் விழுந்த அவள் மனசு இன்று பரவசக் கடலாகப் பொங்கி மகிழுமா?

''சார்... சாந்தா வேதமூர்த்தின்னு...''

''சாரி சார். திருச்சிராப்பள்ளி கல்வி மாவட்டத்திலே மொத்தம் பதினைந்து சாந்தா டீச்சர்ங்க இருக்காங்க. ஆனால் வேதமூர்த்தியைக் கணவனாய்க் கொண்ட சாந்தா யாருமே இல்லை, சார்.''

## ஒரு எங்க ஜோக்!

### பட்டிமன்ற ராஜா

இந்தக் கோடையில பூனாவுல ஒரு நிகழ்ச்சியில கலந்துக்கறதுக்காகப் புறப்பட்டோம். நான், பாரதி பாஸ்கர், கல்யாணமாலை மோகன் மூணு பேரும் மும்பை ஏர்போர்ட்ல காத்துக்கிட்டிருந்தப்ப, அறுபது வயசு அம்மா ஒருத்தங்க குடும்பத்தோடு என்னைப் பார்த்துட்டாங்க; 'ஆஹா ஓஹோ'ன்னு பாராட்டினாங்க. எல்லாப் பாராட்டையும் நமக்கே கொடுக்கறாங்களேன்ற ஆதங்கத்துல பக்கத்துல இருந்த பாரதி பாஸ்கரை அவங்களுக்கு அறிமுகப் படுத்தினேன். உடனே அந்த அம்மா, 'பாரதி பாஸ்கரை எங்களுக்குத் தெரியாம இருக்க முடியுமா? அறிவுபூர்வமா பேசறவங்களாச்சே'ன்னாங்க. 'அப்ப நான்?'னு கேட்டேன். 'நீங்க வெறும் காமெடியன் தான். இருந்தாலும் உங்களையும் எனக்குப் பிடிக்கும். ஏன்னா.. என் மகன் பேரும் ராஜாதான்!' னாங்க.



மறுபடியும் ஓடினேன் திருவாரூருக்கு. கமலாலயக்கரையில் டாக்டராகப் பிராக்டீஸ் பண்ணிக் கொண்டிருந்தான் சுந்தரமூர்த்தி.

பிடித்தேன். ''ஏன்டா உண்மையா?''

''ஹண்ட்ரட் பர்சண்ட் ஷ்யூர்'' என்று தலையில் அடித்தான்.

சத்திரம், மத்திய பேருந்து நிலையங்கள், மாநகரப் பேருந்துகள், வழித் தடங்கள் மாறி மாறி, ஏறி இறங்கினேன். என் தேடல் முழுவதும் மேடை ஏறாத ஆட்டமாகவே அடங்கிப் போயிற்று.

அப்படியானால், என் அம்சவல்லி எங்கே...? எங்கே இருக்கிறாள்- என் அம்சவல்லி?

இதோ... இதோ இருக்கிறாள். இந்தச் சுவரொட்டியில்.

'சாந்தா என்ற அம்சவல்லி (ஆசிரியை) நேற்றிரவு காலமாகி விட்டார் என்பதை... அன்னாரது இறுதி ஊர்வலம் இன்று பிற்பகல் 3.30 மணிக்கு நடைபெறும் என்ற அறிவிப்புக்குக் கீழே வீட்டு முகவரி.

குளிர்பதன கண்ணாடிப் பெட்டிக்குள் கிடத்தப்பட்டிருந்தாள், அம்சவல்லி. அவளது கால்மாட்டில் கண் கலங்கியவராக வேதமூர்த்தி. அம்சவல்லியை அப்படியே உரித்தெடுத்தது போல் இரண்டு பெண்கள் தலைமாட்டில் நின்று தேம்பிக் கொண்டிருந்தார்கள்.

''சாந்தா என்ற அம்சவல்லி என்று போட்டிருக்கிறதே, எது அஃபிஷியல் பெயர்?'' அதிகாரியைப் போல இருந்த ஒருவர் கேட்டார்.

''சாந்தான்னுதான் சர்டிஃபிகேட்டில் எல்லாம் இருக்கும். ஆனால் கெஜட்டிலே அம்சவல்லின்னு அவ பேரை மாத்திட்டா. அவளுடைய அஃபிஷியல் நேம் அம்சவல்லிதான்!''- தொண்டை கரகரக்க விளக்கம் சொல்லிக் கொண்டே போனார் வேதமூர்த்தி.

என் கண்களில் கண்ணீர் சுரந்தது.

இப்போது விற்பனையில்...
ஜூலை 2007

கவர் ஸ்டோரி

# கண்மணிகளின் நாயகன்!

புதிய பகுதி

# ஆஹா ஆல்ப்ஸ்!

மேலும் உங்கள் குழந்தைகளின் படைப்புத்திறனை
புகைப்படத்துடன் வெளிப்படுத்தும் அட்டகாசமான பகுதிகள்!
இத்தனையும் எட்டே ரூபாயில்...

# கோகுலம்

குழந்தைகளின் குதூகலம்!

# அமரர் கல்கி

கல்யாணமான கொஞ்ச நாளைக்கெல்லாம் மாமனாரின் வீட்டுக்கு மாப்பிள்ளை வந்திருந்தான். பெண் கொஞ்சம் தைரிய சாலி. புருஷன் தன்னுடன் பேச விரும்புவானென்று நினைத்து, அவன் தனியாய் இருக்கும்போதெல்லாம் அவன் அருகில் அருகில் போய்க்கொண்டிருந்தாள். ஆனால், அவனோ, அவள் புடைவைத் தலைப்பைக் கண்டதும் ஓடி ஓடிப் போய்க் கொண்டிருந்தான். கடைசியாக, ஒரு தடவை அவன் அவ்வாறு ஓடத் தொடங்கினபோது, அவள் அவனுடைய அங்கவஸ்திரத்தைக் கையில் பிடித்துக்கொண்டு வெட்கத்தினால் தலை குனிந்தாள். ஒரு நிமிஷம் அவ்வாறு நின்றும் பேச்சு ஒன்றும் வராமல் போகவே நிமிர்ந்து பார்த்தாள். ஆசாமியைக் காணோம்! அங்கவஸ்திரம் மட்டும் சுவரில் அடித்திருந்த சட்டத்தில் மாட்டிக்கொண்டு தொங்கிற்று!

ஒரு மாப்பிள்ளை பெண் பார்க்க வந்திருந்தான். பெண், பார்ப்பதற்குக் கொஞ்சம் சுமாராய்த்தான் இருக்குமென்பதை முன்னிட்டுப் பெண் வீட்டார் ஒரு யுக்தி செய்தார்கள். மாட்டு வியாபாரத்தைப் போல், பெண்ணை எதிரில் கொண்டுவந்து நிறுத்த மாட்டோமென்று சொல்லி, குறுக்கே நெடுக்கே போய்க்கொண்டிருக்கும்போது காட்டுவதாகவும் பார்த்துவிடும் படியும் சொன்னார்கள். குறுக்கே நெடுக்கே போய்க்கொண்டிருந்த அடுத்த வீட்டுப் பெண்ணைக் காட்டிவிட்டார்கள். பையனும் சம்மதித்துப் போய்விட்டான். பிறகு கல்யாணத்தன்று மணையில் உட்கார்ந்த போது பெண்ணைக் கடைக்கண்ணால் பார்த்ததும் மிரண்டு விட்டான். சற்றுநேரம் முழித்துவிட்டு, ''நான் பார்த்தது இந்தப் பெண் இல்லை'' என்று சொல்லிக் கொண்டு எழுந்தான். ஒரே அல்லோல கல்லோலம்! மாப்பிள்ளையைப் பலவந்தமாகப் பிடித்து உட்கார வைக்க முயன்றார்கள். அவன் திமிறிக்கொண்டு ஓடிப் பெண்கள் கூட்டத்தில் இருந்த அடுத்த வீட்டுப் பெண்ணருகில் சென்று, ''இதோ இவளைத்தான் நான் பார்த்தது; இவளைத்தான் கல்யாணம் செய்துகொள்வேன்!'' என்று சொல்லி அவள் கையைப் பிடிக்க முயன்றான். அவள் ஏற்கெனவே கல்யாணம் ஆனவளாதலால், ''அடடே! உன்னை ஏழாயிரத்து ஐந்நூத்தி இருபத்து நாலு பாம்பு பிடுங்க'' என்று வைதுவிட்டு ஓடினாள். அப்போது மணப்பெண் கண்ணைக் கசக்கிக் கொண்டு, ''இவள் எதற்காக என் ஆத்துக்காரரை வைகிறாள்? இவள் ஆம்



படையானைத்தான் பதினாயிரத்து இரு நூற்று எழுபத்தேழு தேள் பிடுங் கட்டுமே?'' என்றாள். இது மாப்பிள்ளையின் காதில் விழவே, உடனே அவன் முகம் மாறுதல் அடைந்தது. மளமளவென்று மணையில் வந்து உட்கார்ந்து, ''இனி மேல் மூன்று லட்சத்து ஏழாயிரத்து எண்ணூற்றி இருபத்தைந்தரைப் பேர் வந்து வேண்டாமென்று சொன்னா லும் சரி, நான் இந்தப் பெண் ணைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்'' என்று பிடிவாத



# அடுத்த வீட்டுப் பெண்

மாகச் சொன்னான். விவாகம் இனிது நடந்தேறியது.

நேயர்களே! இதுபோன்ற சம்பவங் களைக் 'காதல் கதைகள்' என்று பெயர் கொடுத்து, எழுதினால் நீங்கள் ஒப்புக் கொள்வீர்களா? தேகத்திலுள்ள முந்நூற்றுச் சொச்சம் நரம்புகளையும் துடிக்கப் பண்ணி, கால் கட்டைவிரல் முதல் உச்சந்தலை வரையில் மின்சார சக்தி ஊடுருவிப் பாய்ந் தது போன்ற உணர்ச்சியை வருவித்து, இரவு பகல் இருபத்துநான்கு மணி நேரத்தையும் சொர்க்கமாகவோ, நரகமாகவோ ஆக்கும் அதிசய, அற்புத, அபார, அதிவேக, ஆச் சரிய, ஆனந்த, அபூர்வ, அதிசய, அற்புத, (இவ்வாறு மீண்டும் மீண்டும், தொண் ணூறு தடவை படிக்க), அபூர்வக் காதல் எங்கே? மேலே கூறிய 'கக்கேபிக்கே' காதல் கதைகள் எங்கே?

இத்தகைய நமது தேச நிலைமையை எண்ணி எண்ணி நான் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கையில் 'பளிச்' சென்று ஒரு யோசனை தோன்றிற்று. அந்த யோசனையைச் சொல்லி விடுகிறேன். ஆனால், யாராவது அதைத் திருடிக் கொண்டு போய் என்னை முந்திக் கொண்டு காரியத்தில் நிறைவேற்றி விடா தீர்கள். யோசனை இதுதான்: 'நமது தேசத் தில் சுத்த சமரச சன்மார்க்கத்துக்குகந்த காதலை வளர்க்கும் நோக்கத்துடன் **காதல் கல்யாண கம்பெனி** என்ப தாக ஒரு கம்பெனியை ஏன் ஏற்படுத்தக் கூடாது?'

- 'ஓ! மாம்பழமே' தொகுப்பிலிருந்து
வானதி பதிப்பகம்

# இறைவனை மட்டும் நம்புவோம்!

'ஜிகினா' பார்த்திபனின் 'சுகமான சுமைகள்' வாசித்தேன். செய்வினை, கண் திருஷ்டி மீது முழு நம்பிக்கை உடையவர்கள் தங்களை அறியாமலேயே தங்கள் உடன் பிறந்தாரிடமும், உறவினர்களிடமும் ஏன் தாங்கள் அன்றாடம் வணங்கும் கடவுளிடமும் கூட நம்பிக்கை அற்றவர்களாக மாறிவிடுகிறார்கள். திருஷ்டி மீது நம்பிக்கையோடு இவர்கள் செயல்படுவதைப் பார்க்கும் பொழுது, சில சமயம் வேடிக்கையாகவும் பல சமயம் அவர்களது அறியாமையைக் கண்டு வேதனையாகவும் இருக்கும்.

இறைவன் நமக்குத் தர நினைப்பதை, தந்ததை ஒருவருடைய கண் திருஷ்டியும் சூன்யமும் தடுக்குமென்றால் அந்த இறைவன் சக்தி அற்றவனாகிறானே! இவர்களுடைய இறைபக்தி அங்கே அடிபட்டுப் போகிறதே! கண் திருஷ்டி மீது அபார நம்பிக்கை வைத்திருப்பவர்களின் இறை பக்தி முழுமையடைந்திருப்பதாக யாரும் சொல்ல முடியாது.

பக்தப்பிரகலாதன் மலை உச்சியிலிருந்து உருட்டி விடப்பட்ட போதும் சரி, ஆழ் கடலில் வீசப்பட்டபோதும் சரி, அவன் நெஞ்சம் 'ஹரி ஹரி' என்றுதான் உச்சரித்ததே தவிர, தன் இளவரசன் பிறப்பில் பிறர் வைத்த திருஷ்டி என்று புலம்பவில்லை.

நேற்று நாம் வாங்கி அணிந்த வளையல் வழியில் கழன்று விழுந்திருந்தால், அது நமது அஜாக்கிரதை என்பதை ஏற்றுக் கொள்ளாமல் அடுத்த வீட்டுக்காரியின் கொள்ளிக்கண் பார்வையால் என்று புலம்பி பழியை அடுத்தவர் தலையில் சுமத்துகிறீர்கள்.

நமக்கு ஆயிரம் ரூபாய் நஷ்டம் வந்தால் அடுத்தவனின் வயிறு எரிச்சல், அதுவே ஒரு லட்சம் கிட்டினால் ஆண்டவன் தந்தது என்று குதூகலிக்கிறோம். 'என் நலனில் அக்கறை கொண்ட நான்கு பேருடைய நல்ல எண்ணம், ஆசீர்வாதத்தினால்தான் எனக்கு லட்சம் கிடைத்தது' என்று யோசிக்க ஏன் வரவில்லை?

இறைவனை மட்டும் நம்புவோம். அவனுக்குத் தெரியும், நமக்கு எப்பொழுது எதைத் தரவேண்டும், எப்பொழுது எதை எப்படி எடுக்க வேண்டும் என்பது. பார்த்திபனின் 'செய்வினை, திருஷ்டி' அனுபவம், கண் திருஷ்டி ஃபோபியாகாரர்களுக்கு உண்மையை உணர்த்தியிருக்கும் என்று நம்புகிறேன்.



- **கோமதி நடராஜன்,**
**சென்னை - 28**

# மக்கள் மன்னன்!



> "கடவுள் நம்பிக்கை எனக்குத் தனிப்பட்ட முறையில் இல்லாது இருந்தாலும், சைவமும் வைணவமும் வளர்த்த தமிழ் என்னை குதூகலிக்கச் செய்கிறது!"

"ஐந்தரை மணிக்கெல்லாம் எழுந்து விடுவேன். எழுந்தவுடன் காதில் சிறிய குறைபாடுக்காக தலையை ஆட்டிப் பயிற்சி செய்வேன். அப்புறம் ஒரு லிட்டர் தண்ணீர்; கொஞ்சம் இடைவெளி கொடுத்துத் தேநீர். ஆறு மணிக்கெல்லாம் நடை களத்துக்கு வந்துவிடுவேன்'' என்கிறார் டாக்டர் ராமதாஸ் நடந்துகொண்டே.

திண்டிவனம் - பாண்டிச்சேரி சாலையில் உள்ள தைலாபுரம் தோட்டம். எங்கும் பச்சைப் போர்வையாய் மரம், செடிகள், பூத்துக் குலுங்கும் கலர் கலரான பூக்கள். மரங்

களில் கொலுவிருக்கும் பறவை களின் ஒலி, சாலையில் செல்லும் பேருந்துகளின் இரைச்சலையும் மீறி சங்கீதமாய் ஒலிக்கிறது. சி.டி. பிளே யரில் 'பித்தா பிறைசூடி' என்று திருத் தணி சுவாமிநாதன் கணீரென்ற குரலில், தேவாரம் பாடிக் கொண் டிருக்க, முந்தைய இரவு பெய்த மழை யில் தரை சற்று சேறும் சகதியுமாக இருந்தாலும் வாக்கிங் போய்க் கொண்டிருக்கிறார் டாக்டர்.

ஒலித்துக் கொண்டிருக்கும் தேவாரப் பண் இசை பற்றிக் கேட் டால், ''கடவுள் நம்பிக்கை எனக்குத் தனிப்பட்ட முறையில் இல்லாது இருந்தாலும் சைவமும் வைண



வமும் வளர்த்த தமிழ் என்னை குதூ கலிக்கச் செய்கிறது'' என்கிறார்.

நடக்கும்போதே தோட்டத்தை நிர் வகிக்கும் உதவியாளர்களிடம், ''அந் தத் தொட்டியை எடுத்து இங்கு வை; இந்தச் செடியை கொஞ்சம் நறுக்கு. இதுக்குத் தண்ணி காட்டலையா?'' என்கிறார். நடைப் பயிற்சியில் செல்ல நாய் வீராவும் சேர்ந்து கொள்கிறது.

நடை முடிந்ததும் தினசரிகளை அலசுகிறார். மீண்டும் ஒரு லிட்டர் தண்ணீர் அருந்தியவுடன் காய்கறி



தோட்டத்துக்கு விசிட். கொடியில் காய்க்கும் காய்கறியிலிருந்து வெண் டைக்காய், கத்திரிக்காய் என்று செடி களில் தொடர்ந்து... பல வகையான கீரைப் பாத்திகள், நாட்டுக் காய்கறி கள், பீட்ரூட், காரட், கோஸ், காலிஃப்ளவர் என்று ஆங்கில காய் கறிகளையும் போட்டு மகசூல் எடுக் கும் மன்னராகத் திகழ்கிறார் டாக்டர். 'இங்கு இல்லாத காய்கறிகளே இல்லை' என்று பெருமைபட்டுக் கொள்கிறார்.

காய்கறித் தோட்டத்தைப் பார்த்து விட்டு வந்ததும் அடுத்த ஒரு மணி நேரம் யோகா, மூச்சுப் பயிற்சி, தியானம். அரு கிலிருக்கும் தொலைக்காட்சியில் மக்கள்

டி.வி.யில் நன்னனின் தமிழ்ப் பண்ணை நிகழ்ச்சி நடந்து கொண்டிருக்கிறது. அதை அவ்வப்போது பார்த்துக்கொண்டும் கேட்டுக்கொண்டும் டாக்டரின் பயிற்சிகள் செய்கின்றன. ''எப்போதும் குண்டும் குழியுமான சாலையில் காரில் பயணம் செய்பவர்களுக்கு முதுகெலும்புப் பிரச்சனைகள் வரும். யோகாசனப் பயிற்சி அதைத் தவிர்க்கும்.'' யோகாவுக்குப் பிறகு குளித்து விட்டு டிபன்.

ஒரு சப்பாத்தி, வெண்டைக்காய் குவியலுடன் அதன் மீது சாம்பார்; வேக வைத்த இரண்டு காய்கறிகள், பருப்புடன் ஒரு கீரை, முளை கட்டிய பயிறு, நவதானிய தோசை ஒன்று, பச்சைக் கோவைகாய் ஐந்து, முட்டை (வெள்ளை கரு மட்டும்), பாதாம் பருப்பு மூன்று, வால்நட் மூன்று, காய்கறிகள் மற்றும் கீரையுடன் நிறைய பூண்டு கலந்திருக்கிறது. ''நான் சாப்பிடும் இந்தக் காலை உணவில் மனிதனுக்குத் தேவையான எல்லா சக்தியும் இருக்கிறது'' என்கிறார் டாக்டர்.

> **"நான் சாப்பிடும் காலை உணவில் மனிதனுக்குத் தேவையான எல்லா சக்தியும் இருக்கிறது!"**



''அந்தக் கால தமிழர்கள் வரகு, சாமை, தினை ஆகிய அரிசி வகைகளை தினசரி சாப்பிட்டு வந்தார்கள். ஆனால், இன்று பலருக்கு இந்தப் பெயர்களே புதுமையாக இருக்கக் கூடும். எனக்குச் சர்க்கரைக் குறைபாடு இருப்பதால் குறுகிய இடைவெளிகளில் குறைந்த அளவு சாப்பிட வேண்டும். அப்படிச் சாப்பிடுவதும் சத்துள்ளதாக இருக்க வேண்டும்'' என்று டாக்டர் பேசிக் கொண்டிருக்கும்போதே, ''வணக்கம் ஐயா'' என்று உள்ளே நுழைகிறார்கள் பா.ம.க. தலைவர் ஜி.கே.மணியும், பாராளுமன்ற உறுப்பினர் ஏ.கே. மூர்த்தியும். ''கட்சி நிர்வாகிகளின் கூட்டத்தைக் கூட்டியிருக்கிறோம்'' என்று நம்மிடம் கூறிக்கொண்டே ''எல்லோரும் வந்தாச்சா?'' என்று வந்தவர்களிடம் விசாரிக்கிறார் டாக்டர். இனி மீதி நாள் அவருடையது அல்ல.

– ப்ரியன்

படங்கள்: ராஜன்

இந்த வாரம் 'காதல் நந்தவனம்' கவிதை ஸ்பெஷலாக அளிக்கப்படுகிறது. அப்புறம், போன வாரம் ஒரு உறுதி மொழி எடுத்திருந்தேன், முதல் பாரா வைத் தவிர வேற எங்கேயும் வரமாட் டேன்னு. அதை வாபஸ் வாங்கிட்டு ஒவ் வொரு கவிதை முடிவிலும் 'கமெண்ட்' அடிச்சிருக்கேன். அப்படின்னா உறுதி மொழி என்ன ஆச்சுன்னு கேட்கறவங் களுக்கு கவுண்டமணி ஸ்டைல்ல பதில்...

''பத்திரிகைத் துறையில இதெல்லாம் சகஜமப்பா!''

**பின்குறிப்பு :**

எல்லா கவிதைகளுமே காதலியை வர்ணிச்சு ஆண் கவிஞர்கள் எழுதினதா இருக்கு. காதலனின் கம்பீரத்தை வர் ணிச்சு பெண் கவிஞர்கள் கவிதைகளை அனுப்புங்களேன். கவிதைக்குப் பொய் அழகு. உங்க காதலன்கிட்டே கம்பீரம் இல்லைன்னாலும் பரவாயில்லை, இருக்கிறதா பொய்யா நினைச்சுக் கிட்டு அனுப்புங்க ப்ளீஸ்!

**காற்று**

வளி மண்டலத்தில்
என்னவளை
உலவ விடுங்கள்
கரியமில வாயு
கலைந்து
குளோபல் வார்மிங்
குறையும்...
அவ்வளவு குளிர்ச்சி!
அறிய முடியா
அறிவியல் இவள்!

- **எம்.ஜான்சன்,**
**கோவில்பட்டி**

(அப்படியே கொசுவை ஒழிக்கற பவரும் உங்க 'ஆள்'கிட்ட இருக்கான்னு கேளு சாரே! சிக்குன் குன்யாவை நினைச்சா பயமா இருக்கு!)

# காதல்




வந்துவிடு காதலா...
அடிக்கின்ற வெயிலில்
கடல் வற்றிப் போவதற்குள்!





**மதனராஜன்**

# நந்தவனம்

### உயிர் தெரபி

சிறுகச் சிறுக எனது சுவாசம்
செலவாகிக் கொண்டே
இருக்கிறது
எனது செல்களிலெல்லாம்
காதல் சோர்வு
சீக்கிரம் வந்து
பார்வைக் கரங்களினால்
உயிர் தெரபி
செய்துவிட்டுப் போ!

**- தஞ்சை சகா**

(டாக்டர் ஃபீஸ் கொடுத்துடுவீங்களா?)

### சுற்றல்

வெட்டியாய் ஊர் சுற்றிய
என்னை மாற்றிவிட்டாய்
இப்போது
உன்னையே சுற்றுகிறேன்!

**- ராம் ஆதிநாராயணன், தஞ்சாவூர்**

(ஆக மொத்தம் வீட்டுக்குத் தண்டச் சோறாவே இருக்கீங்கன்னு சொல்லுங்க)

### கடிதம்

உனக்கு நானனுப்பும்
கடிதங்களை
எனக்கே
திருப்பியனுப்பிவிடுகிறாயே...
நீயே ஒப்புக்கொள்கிறாயா
எனக்குள் நீ வசிப்பதை?

**- வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி**

(எதுக்கும் From, To சரியா போட்டீங் களான்னு 'செக்' பண்ணுங்க)

### வளையல்

வளையல்களை
நீ சுமக்கிறாய்
செருப்பு
உன்னைச் சுமக்கிறது
நான் செருப்பாக
இருக்கிறேன்...

**- அனார்கலி, தஞ்சாவூர்**

(செருப்பு கால்களைக் கடிக்காத வரைக்கும் சந்தோஷம்)

### குதிரை

முடமான
கற்பனைக் குதிரை
என்னுடையது...
வார்த்தை ஜாலங்கள்
வர்ணனை வித்தைகளுடன்
கவிதை எழுத வராது...
எவரேனும் என்னிடம்
கவிதை கேட்டால் -
எழுதுவேன்
என்னவள் பெயரை!

**- எஸ்.சங்கர், மதுரை**

(முடமான குதிரையை இம்சை பண்ணாதேப்பா, ப்ளூ க்ராஸ்ல புடிச் சிடப் போறாங்க)

# இம்சைஅரசன்

''மூப்பது வயது இளைஞர் ஒருவர் வயிற்று வலி என்று வந்தார். சோதனை செய்து பார்த்ததில் அவர் இரைப்பை புற்றுநோயால் பாதிக்கப்பட்டிருப்பது தெரிய வந்தது. இதை ஏற்க முடியாமல் பெரும் அதிர்ச்சி அடைந்தார். ஐம்பது வயதைத் தாண்டியவர்களுக்கே முன்பெல்லாம் வந்த இரைப்பை புற்றுநோய், இப்போது இளம் வயதினருக்கும் வருகிறது.''

சென்னை ராயப்பேட்டை விநாயகம் லேசர் மருத்துவ மனையின் என்டோஸ்கோபி மற்றும் லேசர் அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் ராஜேந்திரன் கூறியது வருத்தப் பட வைத்ததென்றால், ரத்த சோகைகூட இரைப்பை புற்றுநோய்க்கு அறிகுறியாக இருக்கக்கூடும் என்று அவர் கூறியது திடுக்கிட வைத்தது.

''அனீமியா எனப்படும் இரத்த சோகை இப்போதெல் லாம் அதிகமாகி வருகிறது. வயிற்றுப் பூச்சி, மாதக் கணக்கில் இருக்கும் தீராத காய்ச்சல், பெண்களுக்கு ஏற் படும் இரத்தப்போக்கு என்று இதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். இம்சை அரசன் போன்ற இரைப்பைப் புற்றுநோயும் ஒரு காரணம்'' என்கிறார்.

''இரைப்பையில் புற்றுநோய் ஏற்பட்டால் முதலில் மூன்றிலிருந்து ஆறு மாதங்களுக்கு தீராத வயிற்று வலி இருக்கும். இந்த வலி உணவு தொடர்பானதாக இருக்கும். 'சாப்பிட்டவுடன் வலிக்கிறது' அல்லது 'வெற்று வயிறாக இருக்கும்போது வலிக்கிறது' என்பதுபோல் கூறுவார்கள். அடுத்த கட்டம் பசியில்லாமல் இருப்பது. 'காலையில் எதையாவது சாப்பிட்டா அது ராத்திரி வரை தாங்குது' என்பார்கள். அடுத்து உடல் மெலியும்; எடை குறையும். இன்ன காரணம் என்றே குறிப்பிட முடியாமல் இரத்தத் தில் உள்ள சிவப்பணுக்களின் எண்ணிக்கை குறையும் (இதைத்தான் இரத்தச் சோகை என்கிறோம்). பிறகு விட்டுவிட்டு காய்ச்சல் வரும்.

மாதக்கணக்கில் வயிற்று வலி என்று யாராவது வந்தால் என்டோஸ்கோபி சோதனை செய்து பார்ப்பது தான் புத்திசாலித்தனம். காரணம் ஆரம்ப நிலையி லேயே இரைப்பை புற்றுநோயைக் கண்டுபிடித்தால் குணமாக்குவது எளிது. ஆனால், நூற்றில் ஒருவர்தான் இந்தக் கட்டத்தில் சிகிச்சைக்கு வருகிறார் என்பது வருத்தமான விஷயம்.

ஆரம்பக் கட்டம் என்றால் சின்னதாக ஒரு புண் இருக்கும் அல்லது இரைப்பையின் ஏதாவது ஓர் இடத் தில் சிவப்புக் கட்டி இருக்கும். அதன் ஒரு பகுதியை திசுப் பரிசோதனைக்கு (பயாப்சி) அனுப்புவதன்



✱ டாக்டர் ராஜேந்திரன்

# இரைப்பைப் புற்றுநோய்!

மூலம் புற்றுநோயா, இல்லையா என்பதை உறுதி செய்து கொள்ளலாம்.

இந்நோய் வர உணவுப் பழக்கத்துக்கு முக்கியப் பங்கு உண்டு. உறைப்பான உணவு, சிவப்பு இறைச்சியை தவிர்த்து விடுங்கள். வேக உணவு வகைகளில் நிறைய செயற்கைப் பொருள்கள் கலக்கிறார்கள். இவற்றில் நைட்ரைட் என்ற ரசாயனம் புற்றுநோயை உருவாக்க வல்லது. மதுப் பழக்கம் இன்னொரு காரணம்.

வலி நிவாரணி மாத்திரைகளைத் தொடர்ந்து சாப்பிட வேண்டாம். இவை கூட ஒரு வகையில் இரைப்பை புற்று நோய்க்குக் காரணமாக அமையக் கூடும். இப்போதெல்லாம் வலி நிவாரணியோடு ஹெமடிடின் என்ற பொருளும் இணைந்த மாத்திரைகள் அறிமுகமாகிவிட்டன. இவை சிறுகுடலை அடைந்த பிறகுதான் உடலால் உறிஞ்சிக் கொள்ளப்படுகின்றன (இரைப்பையிலேயே தங்கி அங்குள்ள அமிலங்கள் வேலை செய்யும்போதுதான் புற்றுநோய் உண்டாக வாய்ப்பு). இவற்றால் புற்றுநோய் உருவாவதில்லை.

டின்னில் அடைக்கப்பட்ட உணவுப் பொருள்களில் (அவை கெட்டுப் போகாமல் இருக்க) அசிடிக் அமிலம் சேர்க்கப்படுகிறது. இதுவும் புற்றுநோய்க்குக் காரணமாக அமையக்கூடும்.

பலரும் புகையிலைப் பழக்கம் தொண்டைப் புற்றுநோயை மட்டுமே உருவாக்க வாய்ப்புண்டு என்று நினைக்கிறார்கள். நிஜம் அப்படியல்ல. இந்தப் பழக்கத்தின் காரணமாக உணவுக் குழாயும் இரைப்பையும் சந்திக்கும் இடத்தில் புற்று நோய் உண்டாக நிறைய வாய்ப்பு உண்டு.

வயிறு சம்பந்தப்பட்ட இது போன்ற நோய்களுக்கு என்டோஸ்கோபி சோதனை இன்றைக்கு வரப்பிரசாதமாக அமைந்திருக்கிறது. இப்போதெல்லாம் இந்தத் தொழில்நுட்பத்தில் பல வித முன்னேற்றங்கள். குரோமோ எண்டோஸ்கோபி என்ற முறையில் ஒரு மில்லிமீட்டர் அளவுகொண்ட புற்றுநோய்த் திசுவைக் கூட, வண்ணச் சாயம் ஒன்றை உள்ளே செலுத்துவதன் மூலம் வேறுபடுத்திக் கண்டுபிடிக்க முடியும்.



கேப்ஸ்யூல் மூலமாகவே செய்யப்படும் எண்டோஸ்கோபி சோதனையும் அறிமுகமாகிவிட்டது. இதை விழுங்கினால் அதன் உணவுப் பாதை முழுவதையும் உள்ளே இருக்கும் கேமரா படம்பிடித்து வைத்துக் கொள்ளும். கேப்ஸ்யூலும் இறுதியில் தானாக வெளியேறிவிடும்.

தொழில்நுட்ப முன்னேற்றங்கள் மருத்துவ உலகுக்கு வரம் தான். ஆனால், ஆரம்ப அறிகுறிகளை உணர்ந்து மருத்துவ ஆலோசனை பெற்று, நோய்களைத் தவிர்க்க முயல்வதுதான் புத்திசாலித்தனம்'' என்கிறார் டாக்டர் ராஜேந்திரன்.



**- ஜி.எஸ்.எஸ்.**

வண்டியில் காற்று இறங்கியிருந்தது. கொஞ்ச தூரம் தள்ளிக்கொண்டு நடந்துதான் ஆக வேண்டும். எனவே, முத்துராமன் நடந்தான்.

குழப்பமாக இருந்தது. கோபமும் துக்கமுமாகப் பொங்கிக்கொண்டு வந்தது.

''தபாரு முத்துராமா. உனுக்கு வயசு கம்மி. அனுபவம் கம்மி. எள ரத்தம் பாரு... சீக்கிரம் கொதிச்சிரும். இதெல்லாம் பொது வாழ்க்கைக்குச் சரிப்படாதுய்யா. இப்ப என்னா ஆயிருச்சின்னு இந்த குதி குதிக்கிற?'' என்று கேட்டார் எம்.எல்.ஏ. தங்கவேலு.

உண்மையில் ஒன்றும் ஆகவில்லை என்றுதான் அவனுக்கும் தோன்றியது. அரசியலில் ஒரு மாவட்டச் செயலாளரும் வட்டச் செயலாளரும் ஒன்று சேர்வதா பெரிய விஷயம்?

முதல் பார்வையில் பகீரென்றுதான் இருந்தது. எம்.எல்.ஏ.வின் கழுத்தை நெரித்துக் கொல்லும் ஆங்காரம் வந்தது. ஆனால் சில வினாடிகளில் சுதாரித்துக் கொண்டான். சிங்காரம் அட்டகாசமாகச் சிரித்தபடி 'வாய்யா' என்று வரவேற்றபோது, போன ஜென்மத்தில் கூட ஒன்றுமே நடவாதது போலத்தான் கைகூப்பி வணங்கி அருகே சென்று தரையில் அமர்ந்தான்.

''என்னாய்யா பாக்குற? திருடனுக்குத் தேள் கொட்ன மாதிரி இருக்கா?'' என்றார் சிங்காரம். எம்.எல்.ஏ. சிரித்தார்.

''அதெல்லாம் ஒண்ணுமில்லீங்களேண்ணே. நீங்கதான் எப்பவும் என்னிய தப்பாவே புரிஞ்சிக்கிறீங்க'' என்று சொன்னான்.

''தபாருய்யா தங்கம்! நான் தப்பா புரிஞ்சிக்கறனாம். என்னா புள்ளய்யா இது!'' என்று ஆச்சர்யப்படுவது போல் பாவனை செய்தார். தங்கவேலு சிரித்தார். ''சரக்கு அடிக்கிறியாய்யா?'' என்று கேட்டார். சிநேக பாவம் மேலோங்கித் தழைக்கும் காலம் போலிருக்கிறது.

''சேச்சே. அதெல்லாம் வேணாம்ணே.''

''சரி, என்னா விசயம் சொல்லு'' என்றார் எம்.எல்.ஏ.

''ஒண்ணும் இல்லண்ணே. உங்கள பாக்கணும்போல தோணிச்சி. அதான் ஓடியாந்துட்டேன். இங்க வந்ததுல சிங்காரண்ணனையும் பாத்துட்டேன். மனசுக்கு நிறைவாயிருச்சிண்ணே. அண்ணன் என்னிய ரொம்ப தப்பா நெனச்சிக்கிட்டிருக்காரு. அவரு ஓட்டல நாந்தான் கொளுத்திட்டேன்னு ஒரு கோவம். நீங்கதாண்ணே எடுத்துச் சொல்லணும்.''

''யாரு சிங்காரமா? யோவ் என்னாய்யா இது? நம்ம முத்துவ தெரியாது ஒனக்கு? பீடி

பா. ராகவன்



# கொசு

பத்த வெக்கக்கூட குச்சி கிழிக்கத் தெரியாதுய்யா அவனுக்கு'' என்றார். சிங்காரம் இதற்கும் அட்டகாசமாகச் சிரித்தார். முத்துராமனுக்கு நரகமாக இருந்தது. ஓடிவிடலாம் என்று தோன்றியது கண்காணாமல். முடிந்தால் சென்னையை விட்டே.

''என்னப்பா நீ சின்ன புள்ளையா இருக்கே. ஏண்டா பத்தவெச்சன்னு நாலு பேரு எதிர்த்தாப்புல நான் கேட்டன்னா, அதுக்கே நீ எனுக்குத் தனியா ஒரு டிரீட் வெக்க வேணாமா? எனுக்கு ஒட்டல் எரிஞ்சது ஒரு ஸ்டேடகன்னா, அதுக்கு நீ காரணம்னு நான் சொன்னது உனக்கு ஒரு ஸ்டேடகு. புரியுதா?''

புரியவில்லை. சத்தியமாகப் புரியவில்லை அவனுக்கு. இதே சிங்காரம்தானே எம்.எல்.ஏ.வைப் பற்றி மேலிடத்தில் பேசி பதவிக்கே வேட்டு வைக்க விருப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தவர்! இதே எம்.எல்.ஏ.தானே இந்த சிங்காரத்தை அரசியலைவிட்டே அப்புறப்படுத்த இருபத்தி நாலு மணி நேரமும் கனவு கண்டு கொண்டிருந்தவர்! என்ன ஆயிற்று?

''தலைவரு சொல்லிட்டாரு தங்கம். இன்னமே நம்ம ஏரியாவுக்குள்ள ஒனக்கும்

25

## இது எங்க சம்மர்!

**பாடகி ரோஷினி**

இந்த வருஷம் எங்க வீட்லயும், பக்கத்து வீட்லயுமா சேர்ந்து ஊட்டிக்குப் போனோம். தொட்டபெட்டாவுல எக்கச்சக்கமான குளிர்ல ஐஸ்கிரீம் சாப்பிட்டேன். அப்படியும் எனக்கு ஜலதோஷம் பிடிக்கலை. கூட வந்திருந்த குழந்தைகளோடு, பார்க்குல விளையாடுனப்போ, சிலர் என்னை அடையாளம் கண்டுட்டு வியப்பாப் பார்த்தாங்க. மக்களுக்கு என்னை அறிமுகப்படுத்தின சினிமாவுக்கு மானசீகமா நன்றி சொன்னேன். அங்க ஒரு அம்மா 'உங்க பாட்ட ரேடியோலயும் டி.வி.லயும் கேட்டு ரசிச்சிருக்கோம். ஆனா இப்ப எங்க முன்னால ஒரு பாட்டை பாடிக் காட்ட முடியுமா?'ன்னு கேட்டாங்க. உடனே பாடினேன். எக்கச்சக்கமான பாராட்டு!



எனக்கும் ஒரு பிரச்னையும் வராது. நீ நெரந்தர எம்.எல்.ஏ; நான் நெரந்தர வாரியத் தலைவர். த... இவன் இருக்கானே, சொன்னா சந்தோசப்படுவானே? தெரியுமா முத்து? இன்னமே ஐயாதான் கொசு ஒழிப்பு வாரியத் தலைவரு. மொத வேலை உன் குப்பத்த சரி பண்றதுதான்!''

தங்கவேலு புன்னகை செய்தார். ''அதுக்கு என்னண்ணே? நீங்க பதவில இல்லாதப்பவே செய்ய நெனச்சது தானே? எவனோ களவாணிப்பசங்க குறுக்கால பூந்து கெடுக்கப் பாத்தானுக. இனிமே உங்க தெருக்கு ப்ரேக்கே கிடையாதுண்ணே. சும்மா அடிச்சி ஆடுங்க.''

மீண்டும் சிரித்தார்கள். முத்து ராமனுக்குப் பற்றிக்கொண்டு வந்தது.

''தங்கம் ஒரு விசயம் தெரியுமா ஒனக்கு? இன்னிக்கிக் காலைலதான் தோணிச்சி. ஒலகத்துலயே நெரந்தரமான பதவி கொசு ஒழிப்பு வாரியத் தலைவரு பதவிதான். ஆளு வேணா மாறலாம். இந்த டிபார்ட்மெண்ட இங்க ஒண்ணும் பண்ணமுடியாது.''

''பின்ன? கொசுவ ஒழிச்சிர முடியுமாண்ணே? கல் தோன்றி மண் தோன்றாக் காலத்துலேருந்து இருக்கு தில்ல? அட, ரெண்டாயிரம் வருசத்துக்கு முன்னால திருவள்ளுவரே மலேரியா வந்துல்ல செத்திருக்காரு!''

''இன்னாய்யா புதுசா சொல்ற?''

''அடிச்சிவிட வேண்டியதுதானே? தபாருங்கண்ணே. மெட்ராசுல ஒரு குப்பத்த விடாதீங்க. டெய்லி மருந்து அடிக்கவைங்க. விழிப்புணர்வுக் கூட்டம் போடுங்க. புள்ளைங்களுக்கு ஹெல்த் செக்கப் முகாம் தொறக்க ஏற்பாடு பண்ணுங்க. நீங்க செஞ்சாத் தாண்ணே உண்டு. எம்.எல்.ஏ.ன்னு பேரு; என்னா செய்ய முடியுது எங்களால? தெனம் சட்டசபைக்குப் போயிட்டு வர்றதுக்குள்ளாரவே தாவு தீர்ந்துடுது. எப்பப்பாரு அடிதடி, ரகளை, சண்டை. நேத்திக்கி ஐயங் குறிச்சிப்பாளையம் சம்முகத்தோட பயங்கர சண்டை!''

''பெரிய விசயம்யா. இன்னும் ஒரு மாசத்துக்கு பேப்பர்காரன் உன்னிய கவனிச்சிக்கினே இருப்பான். ஃப்ரீ பப்ளிசிடி. எப்படியும் நாளைக்கு மினிஸ்டர் ஆயிட்டன்னு வையி. இதெல்லாம் மறந்துரும். இல்லேன்னா உன் இமேஜுக்கு உரமாயிரும்.''

சிரித்தார்கள். முத்துராமனுக்குக் கொஞ்சம் புரிவது போலிருந்தது. தங்கவேலு அமைச்சராவது உறுதியாகியிருக்கிறது. உள்ளூரில் பிரச்னையில்லாதிருக்க, சிங்காரத்துக்கு வாரியத் தலைமைப் பதவி. இருவரையும் ராசியாகப் போகச் சொல்லி மேலிடம் உத்தரவிட்டி

ருக்க வேண்டும். தன் குப்பம்? அதன் நலப்பணிகள்? பாளையங்கோட்டை மாநாடு? தலைவர் குடும்பத்துக்குச் சேவை செய்யும் திருப்பணிகள்?

''அ... முத்துராமா ஒண்ணு சொல்ல நெனச்சேன். மறந்தே போனேம் பாரு. கட்சி மாநாடு பாளையங்கோட்டைல நடக்குதுய்யா. உன்னிய மாதிரி புதுப் பசங்கள்லாம் நாலு மாநாடு பாத்தாத் தான் ஒரு இது வரும். என்னண்ணே நாஞ் சொல்றது?''

''பின்ன?'' என்றார் சிங்காரம்.

''அண்ணே.. நான்...''

''அட நீ ஒருத்தன்யா. சும்மா போயிப் பாரு. மூணுவேளையும் மாநாட்டுப் பந்தல்லயே சாப்பாடு குடுத்துருவாங்க. கட்சி கார்டு வெச்சிருக் கல்ல. அது போதும். ஒரு ரெண்டு நாள் ஜாலியா போயிட்டு வா.''

''ஏண்ணே, இப்படி செஞ்சா என்ன? நம்ம முத்துராமனுக்குப் பத்திருவது தையல் மிஷின் வாங்கிக்குடுத்து ஒரு இன்ஸ்டி டியூட் ஆரம்பிச்சிரலாமே நீங்க? இவனும் நாலு காசு சம்பாரிச்ச மாதிரியும் இருக்கும்?''

''செய்யலாமே? இவங்கப் பாரு அந்தக் காலத்துல கட்சிக்கு என்னெல்லாம் செஞ்சிருக்காரு தெரியும்ல? பெரியாளு தங்கம்! தியாகத்துல ஊறின பரம்பரை!''

முத்துராமன் எழுந்துவிட்டான். சாந்தி வீட்டில் தன் திருநெல் வேலிப் பயணத்துக்குப் புதிய அர்த்தம் சொல்லி திருமணத் தையே கெடுத்த சிங்காரம் குறித் துப் புகார் சொல்லத்தான் அவன் வந்திருந்தான். ஒருவேளை அந்தத் திருப்பணியை எம்.எல்.ஏ.வே கூடச் செய்திருக்கலாம் என்று இப்போது தோன்றியது. காரண மில்லாத அன்பு என்று ஏதுமிருப்ப தாக அவனுக்குத் தோன்றவில்லை. ஆனால் கண்டிப்பாக காரணமில்லாத வன்மம் இருக்கிறது. தனக்குத்தான் உலகம் புரிய வேண்டும்.

எழும்பூருக்குத்தான் திரும்பவும் போனான். சாந்தியின் குப்பத்தை நெருங்கிய தருணத்தில் வண்டி அதிர, இறங்கிப் பார்த்தபோதுதான் காற்று தீர்ந்திருந்தது. தள்ளிக்கொண்டு போன போது, சாந்தி எதிர்ப்பட்டாள். நிம்மதி யாக இருந்தது. கண்டிப்பாகப் பேசிவிட வேண்டும். நிறுத்தியபோது தடை யேதும் சொல்லாமல் உடன் வந்தாள்.

என்னென்னவோ பேச நினைத்து எல்லாம் முட்டிமோதிச் சிதறிக் கொண்டிருந்தன. திரும்பவும் தோற்று விடுவோமோ என்று தோன்றியது. அழுகை வந்தது.

(அடுத்த இதழ்வரை தொடரும்)

## இது எப்படி இருக்கு!

**சிட்டி பாபு**

குடும்பத்தோட கொடைக்கானலுக் குப் போனேன். அங்க ஃபைன் ஃபாரஸ்ட் பகுதிக்கு நாங்க போயிருந்தப்போ ஏகப் பட்ட குரங்குகள் என்கிட்ட வந்து சுத்தி நின்னுக்கிச்சு. உடனே என் மனைவி, 'ஏங்க, உங்களுக்குக் குரங்குங்ககூட ரசிகர்களா இருக்குது பாருங்க' என்றார். எந்த மனுஷ ரசிகரும் என்கிட்ட வர முடியாத அளவுக்கு 'ப்ளாக் மங்கி' படை என்னைக் காப்பாத்துச்சு.

அப்புறம் சூசைட் பாயிண்ட் அருகில் காரை நிறுத்தி, வேக வேகமா நடக்க ஆரம் பித்தவுடன் என் மனைவி 'எங்க போறீங்க?' என்று கேட்க, நான், 'சூசைட் பாயின்ட்டுக்கு'ன்னு சொன்னதும் 'அய் யய்யோ... என்ன ஆச்சு உங்களுக்கு?' என்று அலறிவிட்டாள்.

பிறகு 'எப்படி நான் தற்கொலை பண்ணிப் பேன்.. தமிழ் ரசிகர்களை அவ்வளவு சுலபத்துல விட்டுடுவனா' என்றதும் தான் அவள் பெருமூச்சு விட்டாள்.





# மத்திய அரசுக்கு அபாயச் சங்கு!!

வி.கோபாலன்

**வி**லைவாசி உயர்வுக்கு அதிகப் பணப் புழக்கமும் ஒரு முக்கிய காரணம் என்பது பொருளாதார ரீதியில் ஓர் அடிப்படை உண்மை! கடந்த சில மாதங்களாகக் கட்டுக்கடங்காமல் ஏறி வந்த விலைவாசியினால் மத்திய அரசும், மத்திய அரசின் நிதித்துறையும் ரிஸர்வ் வங்கியும் மிகுந்த கவலைக்குள்ளாயின. அதன் விளைவாக மத்திய அரசு சில இறக்குமதிப் பொருள்களுக்கு வரிச் சலுகைகளை அறிவித்தன. ரிஸர்வ் வங்கியும் நாட்டில் பணப் புழக்கத்தைக் குறைக்கும் நோக்கில் வர்த்தக வங்கிகள் தன்னிடம் வாங்கும் கடனுக்கான வட்டி விகிதத்தை அதிகப்படுத்தியது. மேலும், வர்த்தக வங்கிகள் ரிஸர்வ் வங்கியில் வைத்திருக்க வேண்டிய வைப்புத் தொகையின் அளவையும் (Cash Reserve Ratio) அதிகப்படுத்தியது. இதனால் வர்த்தக வங்கிகள் தாங்கள் கொடுக்கும் கடனின் வட்டி விகிதத்தை அதிகரித்தன. அத்துடன் பொது மக்களிடமிருந்து பெறும் டெபாஸிட்டுக்கான வட்டி விகிதத்தையும் உயர்த்தின.



சில மாதங்களுக்கு முன்பு வரை வங்கிகளின் ஒரு வருட வைப்புத் தொகைக்கான 6 சதவிகித வட்டி, 8 சதவிகிதமாக உயர்ந்திருக்கிறது. இதனால் வர்த்தக மற்றும் தொழில் நிறுவனங்கள் தாங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களின் விலையையும் உயர்த்தும் நிர்ப்பந்தத்துக்கு ஆளாகின்றன. அதனால் இந்தத் தொழில் நிறுவனங்கள் மத்திய அரசுக்கும் ரிஸர்வ் வங்கிக்கும் அபாயச் சங்கு ஊதிவிட்டன. அதிக வட்டி விகிதத்தினால் பொருள்களின் உற்பத்தி விலை ஏறும்போது விலைவாசி மேலும் கூடுதலாக உயரும் நிலை உருவாகக் கூடும் என்பதுதான் அந்த அபாயச் சங்கு!

உடனே மத்திய அரசின் நிதித்துறையும் ரிஸர்வ் வங்கியும் வர்த்தக வங்கிகளுக்கு கடன் மீதான வட்டி விகிதத்தை உயர்த்த வேண்டாம் என்று வேண்டுகோள் விட்டிருக்கின்றன.

ஆனால், மொத்தத்தில் நமது பொருளாதாரத்தை மேம்படுத்தவும் விலை உயர்வை ஓர் அளவுக்கு மேல் போகாமல் கட்டுப்படுத்தவும் மத்திய அரசும் ரிஸர்வ் வங்கியும் சரியான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். ஆனால் அதற்கான அறிகுறி எதுவும் தெரியவில்லை. ●

# தாழ்வு மனப்பான்மையைத் தகர்த்தெறியுங்கள்!

கெரியர் கைடன்ஸ்!



''இன்று நூற்றுக்கு 70 சதவிகித இளைஞர்களின் கால்களில் தாழ்வு மனப்பான்மை என்கிற சங்கிலி கட்டப்பட்டிருக்கிறது. இதற்கு மிக முக்கிய காரணம் தன்னைப் பற்றிய அவநம்பிக்கைதான்'' என்கிறார் இளைஞர் விழிப்புணர்வு இயக்கம் அமைப்பின் தலைவரான செல்வகுமார். இந்த அமைப்பு கல்லூரிகளுக்கும் பள்ளிகளுக்கும் சென்று மாணவ, மாணவியரின் தன்னம்பிக்கையை வளர்க்கும் விழிப்புணர்வுக் கூட்டங்களை நடத்துகிறது.

''முதலில் தாழ்வு மனப்பான்மை என்றால் என்னவென்று நாம் கண்டறிய வேண்டும். ஒருவர் தம் திறமைகளைப் பற்றித் தாமே சுய கணிப்பு நடத்தி, அறிந்து கொள்ள வேண்டும். நம்மைத் தவிர மற்றவர்கள் அனைவரும் புத்திசாலிகளாக, திறமையானவர்களாக இருப்பார்களோ என்ற உணர்வே ஒருவனைத் தாழ்வு மனப்பான்மைக்குத் தள்ளி விடுகிறது. அதற்காக தன்னைப் பற்றி அதிகமாக மதிப்பீட்டுக் கொள்பவன், தலைக்கனம் பிடித்தவனாகி இக்கட்டான சூழலில் மாட்டிக்கொண்டு விழிக்கிறான். பணிவு, அடக்கம் என்பது வேறு, தாழ்வு மனப்பான்மை என்பது வேறு. தன்னம்பிக்கையை வளர்த்துக்கொண்டால் தாழ்வு மனப்பான்மை தவிடு பொடியாகும்.

நான் நடத்தும் கூட்டங்களில் ஒரு விஷயத்தைக் காண்கிறேன். நிகழ்ச்சி நடத்தி முடித்த பிறகு இதைப் பற்றிய உங்கள் கருத்து என்னவென்று மேடை



* இளைஞர் விழிப்புணர்வு இயக்கத்தினருடன் செல்வகுமார்... (இடமிருந்து இரண்டாவது)

யில் வந்து சொல்லுங்கள் என்றால் பத்து நிமிடங்கள் வரை யாரும் வர மாட்டார்கள். காரணம் தயக்க உணர்வு. இதுவும் தாழ்வு மனப்பான்மையின் ஒரு பகுதிதான். இத்தனைக்கும் அங்கிருக்கும் எல்லோருக்கும் ஒரு கருத்து இருக்கும். ஆனால், மேடையில் ஏதாவது தப்பாகப் பேசி விடுவோமோ அல்லது மற்றவர்களுக்குக் கேலிப் பொருளாக ஆகி விடுவோமோ' என்கிற தயக்க உணர்வுதான் அவர்களை அப்படிக் கட்டிப் போடுகிறது. ஆனால் யாராவது ஒரு மாணவன் வந்து பேசிவிட்டால், அந்தத் தடைக்கல் உடைக்கப்பட்டு பலர் தங்கள் கருத்துகளைச் சொல்ல முன் வந்து விடுவார்கள். முதலில் தயக்கம், பய உணர்வைத் தூக்கி எறியுங்கள்.

தாழ்வு உணர்வு ஏற்பட ஒருவனின் நிறம், மொழி மற்றும் தோற்றமும் காரணமாக அமைந்து விடுகிறது. நமது ஜனாதிபதியாக இருந்த இராதாகிருஷ்ணன் ஒரு மேல்நாட்டுக்குச் சென்றார். ஒரு கூட்டத்தில் வெள்ளைக்காரர் ஒருவர் 'நாங்கள் வெள்ளைக்காரர்கள். அனைவரும் ஒரே நிறம்; ஆளப் பிறந்தவர்கள். ஆனால் இந்தியர்கள் பெரும்பாலும் கறுப்பு மற்றும் கலவை நிறமாக இருக்கிறீர்கள்; நீங்கள் அடிமைகளாக இருக்கப் பிறந்தவர்கள்' என்று பேசிவிட்டார். இராதாகிருஷ்ணனுக்குக் கோபம் வந்து விட்டது. 'உலகம் முழுக்கக் கழுதை ஒரே நிறம்தான். ஆனால் குதிரை பல் வேறு நிறங்களில் இருக்கிறது. அதற்காகக் குதிரையை விட கழுதை சிறந்தது என்று சொல்ல முடியுமா?' என்று சூடாகப் பதிலடி கொடுத்தார். மற்றொன்று மொழி. ஆங்கிலம் சரளமாக பேச முடியவில்லையே என்று கவலைப் பட வேண்டாம். ஆனால், சொல்ல வரும் கருத்தைத் தெளிவாக, சுருக்கமாகச் சொல்லத் தெரிந்தால் போதும். நேரு காலத்தில் ஒரு காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் கிருஷ்ணமேனனைப் பதவியிலிருந்து எடுக்க வேண்டும் என்று காமராஜர் சொன்னார். ஆனால், அவரை எடுக்கத் தேவையில்லை என்று நேரு ஒரு மணி நேரம் அலங்கார ஆங்கிலத்தில் பேசினார். ஆங்கிலப் புலமை இல்லாத காமராஜ் கடைசியாக 'He must go' என்று மட்டுமே சுருக்கமாகச் சொன்னார். கிருஷ்ணமேனன் விலக வேண்டியதாகிவிட்டது.

# ஆங்கிலம் சரளமாகப் பேச முடியவில்லையே என்று கவலைப்பட வேண்டாம்!

தோற்றத்தைப் பற்றியும் கவலைப்படாதீர்கள். கண்ணியமாக உடை உடுத்துங்கள். செயற்கைக் காலுடன் அமெரிக்காவிலேயே சிறந்த கால்பந்தாட்ட வீரராக உருவானார் ஆர்தர்போ. எனவே உங்களுக்குத் தேவை தன்னம்பிக்கைதான்; அதுவே தாழ்வுமனப்பான்மை என்ற சங்கிலியை உடைத்தெறியும் வல்லமை மிக்கது'' என்கிறார் செல்வகுமார்.

– ஸ்ரீநி

படம்: பொள்ளாச்சி சுந்தரம்

FOLLOW-UP

# ஹெல்மெட்டுக்கும் ஆஸ்துமாவுக்கும் சம்பந்தமில்லை!

**ஹெல்மெட் அணிவதால் ஏற்படும் அல்லது அதிகமாகும் நோய்கள் பற்றி, சென்ற இதழில் டாக்டர் கு.கணேசன் எழுதிய கட்டுரைக்கு, இங்கே பதில் அளிக்கிறார் அப்போலோ, சுந்தரம் மெடிக்கல் ஃபவுண்டேஷன் மருத்துவ மனைகளின் தலைமை நரம்பியல் துறை அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் கே.கணபதி.**

''ஹெல்மெட் அணிந்து டூ-வீலர் ஓட்டினால் ஆஸ்துமா அதிகரிக்கும் என்பது தவறு. ஆஸ்துமா நுரையீரல் சம்பந்தப்பட்டது. அது பருவ காலங்களில் தாக்கும் நோய். அதுமட்டுமல்ல, ஒரு நாள் அதன் தாக்கம் அதிகமாக இருக்கும். இன்னொரு நாள் குறைவாக இருக்கும். ஏன் ஆஸ்துமா வருகிறது அல்லது அதிகமாகிறது என்று விளக்கிச் சொல்ல வேண்டாமா? நூறு ஆஸ்துமா நோயாளிகளையாவது பரிசோதனைக்கு உட்படுத்தி அறிவியல் ரீதியாக இது நிரூபிக்கப்பட்டிருக்கிறது என்று கூறினால் ஏற்கலாம். அப்படி எதுவுமில்லாமல், நுரையீரல் சம்பந்தப்பட்ட ஆஸ்துமாவுக்கும், தலையில் அணிகிற ஹெல்மெட்டுக்கும் முடிச்சுப் போடுவது பொருத்தமானதே அல்ல.

அடுத்து, நாற்பது வயதுக்கு மேல் செர்விகல் ஸ்பாண்டிலைடிஸ், தலைவலி, கழுத்து வலி இல்லாத ஆட்களே அபூர்வம். ஏற்கெனவே தலைவலி, கழுத்துவலி இருக்கிறவர்கள், ஹெல்மெட் அணிந்து கொண்டதால் தலைவலி அல்லது கழுத்து வலி அதிகமாயிற்று என்பதற்கு என்ன ஆதாரம்? 1000 பேர் ஹெல்மெட் அணிந்து கொண்டும் 1000 பேர் அணியாமலும் ஆய்வு செய்து முடிவைத் தெரிவிக்கட்டும்.

கண் பார்வைக் குறைவுக்கும் ஹெல்மெட்டுக்கும் என்ன சம்பந்தம்? மூளையில் ஒரு குறிப்பிட்ட பகுதிதான் பார்வைக்குக் காரணமானது. இரத்தக் குழாய் அடைப்பு, காடராக்ட் போன்றவைதாம் கண் பார்வைக் குறைவுக்கான காரணங்களில் சில.

எக்ஸிமா எனப்படும் சரும நோய் வரும் என்பதுகூட ஆயிரத்தில் இரண்டு பேருக்கு இருக்கலாம். அதற்கு ஹெல்மெட்டில் கூடுதலான லைனிங் வைத்துத் தைத்து அணிந்து கொள்ளலாமே. அதிலும், பயணம் செய்பவர்கள் என்ன 5 மணி, 10 மணி நேரமா ஸ்கூட்டரில் போகிறார்கள்?''

* டாக்டர் கே.கணபதி



**சந்திப்பு : சாருகேசி**



ரா.பார்த்திபன்

**வா**ஜி... வாஜி... வாஜி... சிவாஜி!
வாஜிகினா... வாஜிகினா
சிவாஜிகினா!

இது ஒரு பாட்டுக்குத் தொகையறா!

ஜாக்கிசானின் மார்க்கெட்டுக்கு மங்களம் பாடப்போகும் பாட்டுக்கு 100 கோடி தொகை-யறா!

நூறுகோடி + மக்கள் தொகையுள்ள இந்திய நாட்டில் நூறு கோடி வர்த்தகம். சினிமாவின் சூப்பர் ஜிகினா ரஜினி நடித்த சிவாஜியின் வித்தகம்!

அமிதாப் + ஷாருக் ஒன்றுக்குள் ஒன்றாக இணைந்து 'அஷாமிருதாக்ப்' என்ற ஹிந்தி படத்துக்குக்கூட அறுபது கோடிதான் வியாபாரம் ஆகுமென விநியோகஸ்தர்கள் முணுமுணுக்கிறார்கள்.

சிவாஜிக்கான எதிர்பார்ப்பு எப்படியிருந்தது என்றால்... சுனிதா வில்லியம்ஸ், விண்கலத்தின் கோளாறைச் சரி செய்து தரையிறங்க, சிவாஜிக்கு ரெண்டு டிக்கெட் லஞ்சமாக வேண்டுமென 'புஷ்'ஷிடம் கேட்க, புஷ் - மன்மோகன் சிங் - ஏவி.எம்.சரவணன் மூவரும் இது சம்பந்தமாக ஓர் ஒப்பந்தத்தில் ஒப்பம் இட்டிருப்பதாகத் தகவல் கசிந்தது.

வழக்கம்போல, ரஜினி திருமலை வழியாக இமயமலை யாத்திரைக்குக் கிளம்ப, அங்கு இமயமலையையே காண வில்லையாம்! விசனத்துடன் ரஜினி விமானமேறி சென்னை திரும்பும் வழியில், கர்நாடகாவை கடக்கும்போது விமானம் எதன் மீதோ மோத... மூடியை மேற்புறமாய்த் தள்ளிவிட்டு நீள் செவ்வகக் கண்ணாடி வழியே பார்த்தால்... ரஜினியின் நீண்டகால நண்பர் என்ற பந்தா எதுவுமில்லாமல் முண்டாகக் கட்டிக் கொண்டு 'சிவாஜி'க்கான ரிசர்வேஷன் கவுண்ட்டரில் வியர்க்க விறுவிறுக்க நின்று கொண்டிருக்கிறது இமயமலை! மலையளவு எதிர்பார்ப்போடு சிவாஜி ரிலீஸானது.

# ஜிகினா - 12

சிவாஜிராவ் சூப்பர் ஸ்டாராக திரு.பாலசந்தர் முதல் நிறைய காரணங்கள்... அதில் ஒருவர் திருமதி. லதா! அவருடைய பொறுமையும் அமைதியும் விட்டுக் கொடுக்கும் பாங்கும்தான் ரஜினி வாழ்க்கையில் ஏற்பட்ட எத்தனையோ சூறாவளி சுனாமிகளுக்கு சூ... மந்திரக்காளி சொல்லி விரட்டியது. அந்த அன்புச் சகோதரியின் வருவாளா? தப்பித்தவறி தளதளன்னு, தக தகன்னு வருவாளா? எதுவுமே தெரியாம, கருவிழி கபடி ஆடக் காத்திருப்பது உலக ளாவிய உவகை!

திரையுலகக் காத்திருப்பு திரை விலகக் காத்திருந்தபோது எனக்குள் ஏகப்பட்ட flash backs. எனக்கும் ரஜினி சாருக்கும் இடையே!

நானும் ரஜினி ரசிகன்தான்! ஆனால்

# ரஜினி தந்த கோடி!

அழைப்பின் பேரில் எனக்கு அந்த நாலாயிர திவ்யப் பிரபந்த தரிசனம் கிடைத்தது. (நாலாயிரத்துக்கு திவ்யமாக விலை போனது எங்களுக்கு கொடுக்கப்பட்ட நாலு டிக்கெட்டின் மதிப்பு). படம் தொடங்கக் காத்திருந்தோம். காத்திருத்தல் எப்போதுமே சுகம். பாவாடை சட்டையில் பார்த்த அத்தைப் பெண் பத்து வருடங் கழித்து வரப்போகிறாள். அவளை வரவேற்க ரயில் நிலையத்தில் வழி மீது விழி வைத்துக் காத்திருப்பது (விழியை யாரும் வழியில் மிதித்து விடாமல்). அந்த ரயில் பத்து மணி நேரம் தாமதமானாலும் காத்திருப்பது சொல்லி மாளா சுகம். வரப்போகும் அத்தை மகள் வத்தலும் தொத்தலுமாக வருவாளா? தெத்துப் பல்லும் நத்தை மூக்குமாக



நல்ல படங்களுக்கும் அவரது நல்ல நடிப்புக்கும். 'முள்ளும் மலரும்', 'இளமை ஊஞ்சலாடுகிறது', 'அவள் அப்படித்தான்'... இப்படி 'பாட்ஷா' வரை!

நடிகரை மீறி அவர் மிக எளிமையான மனிதர். அந்த எளிமைக்கு நான் அடிமை! என் திருமணத்தைப் பற்றி நான் அவரிடம்தான் முதன் முதலில் சொன்னேன்!

அந்தளவு என் வாழ்க்கையில் முக்கிய மானவர். தனக்குத் தெரிந்த ஞானத்தையும்



- புத்திசாலித்தனத்தையும் திரையிடாமல், ரசிகனுக்கு எது பிடிக்குமோ அதை மட்டுமே செய்யக்கூடிய புத்திசாலி!

நான் 'சுகமான சுமைகள்' எடுத்து நஷ்டப்பட்டு, வங்கியில் வாங்கிய கடனை தவணை முறையில் அடைக்க நெஞ்சடைக்கப் போராடிக் கொண்டிருந்தபோது ரஜினி சார் அழைத்தார். அடுத்து நான் தயாரிக்கும் படத்தில் அவர் 'கெஸ்ட் ரோல்' நடித்துத் தருவதாகவும், முக்கிய பாத்திரத்தில் என்னை நடிக்கவும் சொன்னார். அப்போதைய சூழ்நிலையில் அவர் கௌரவ தோற்றத்தில் நடித்தாலே குறைந்த பட்சம் சில கோடியாவது லாபம் பார்க்கலாம். எவ்வளவு உயர்ந்த மனம் இருந்தால் இப்படி ஓர் உதவி செய்ய முன் வருவார்! கூடவே ஒன்றும் சொன்னார். 'SPM மாதிரி நான் கடமைப்பட்ட சிலபேரு கேக்குறாங்க... கெஸ்ட் ரோல் பண்ணச் சொல்லி... நான் யாருக்கும் பண்ணலை. ஆனா உங்களுக்குப் பண்ணித் தரேன்' என்றார். அந்த நெகிழ்ச்சியில் யாருக்குமே தூக்கம் வராது. எனக்கும் வரவில்லை. இரவெல்லாம் யோசித்தேன். மறுநாள் வாஹினி ஸ்டுடியோவில் 'பாட்ஷா' படப்பிடிப்பு. மதிய வேளையில் போய் அவரைச் சந்தித்தேன். உணவுக்குப் பின் என் உணர்வைச் சொன்னேன். 'எனக்குச் சின்ன வயசு. உடம்புல தெம்பும் மனசுல தன்னம்பிக்கையும் நிறைய இருக்கு. ஆனா, SPM சாரெல்லாம் இப்பவே வயசானவங்க - நீங்களும் கடமைப்பட்டிருக்கீங்க! அவங்களுக்கு அப்படி ஒரு வாய்ப்பைக் குடுத்தீங்கன்னா அவங்க உங்களை தெய்வமாப் பார்ப்பாங்க! அதுமட்டுமில்லாம எனக்குள்ள பிரச்னைக்காக நீங்க படம் பண்ணாம, எனக்குள்ள திறமைக்காகவும் என்னுடைய ஸ்கிரிப்டுக்காகவும் என்னைக்காவது நீங்க படம் பண்ணா... ரொம்ப நல்லா... பெருமையாயிருக்கும்' சொல்லி முடித்ததும் அவர் அமர்ந்திருந்த ரிவால்விங் சேர் தானாக என் திசைக்குத் திரும்ப, பார்வையாலேயே பெருமிதம் பொங்கப் பார்த்தார். அந்தப் பார்வை என் உயரத்தை உயர்த்துவதாகயிருந்தது. ஐயோ அதுவே... அந்த வினாடியில் எனக்குக் கிடைத்த பெருமையே, பல கோடி பெறும்!

இன்று வரை அதே உயரத்தில் நான்... அதே நட்போடு அவர்...

திரையில் டைட்டில் ஓடிக் கொண்டிருந்தது.

இணை தயாரிப்பு...
S.P. முத்துராமன்
அப்பாடா!

(மின்னும்)

கேரளாவில் ஆட்சியைப் பிடித்த கையோடு தமிழகத்தில் கோலோச்சலாமா என்று சிக்குன் குன்யா யோசித்து வருவதாகத் தகவல். அது வந்தபோது தமக்கு நேர்ந்த அனுபவத்தை நம்மிடம் பகிர்ந்து கொண்டார் தனியார் நிறுவன ஊழியரான விஜயலக்ஷ்மி.



# "எதிரிக்கும் வேண்டாம் சிக்குன் குன்யா!"

"படிக்கற புத்தகத்துல இருந்து, பார்க்கற ஆட்கள் வரைக்கும் சிக்குன் குன்யா பத்தி பேசிட்டு இருந்த நேரம் அது. 'நமக்கெல்லாம் வராது'ன்னு சாதாரணமா இருந்தேன். மழைக் காலத்துல ரோட்டோரமா அமைதியா போயிட்டிருந்தவங்க மேல சேறு அடிச்ச மாதிரி, எனக்கும் வந்தது சிக்குன் குன்யா. ஒரு நாள் சாயந்திரம் வேலைய முடிச்சுட்டு டிரெய்ன்ல வரும்போது ரொம்ப அசதியா இருந்தது. வீடு வந்து சேர்றதுக்குள்ள கண், தலை எல்லாம் ஒரே பாரம். ராத்திரி தூங்கும்போது பயங்கர குளிர். அடுத்த ரெண்டு நாள்ல அதோட முழு சுயரூபமும் தெரிஞ்சது. யாரோட உதவியும் இல்லாம எழுந்திருக்க, சில சமயம் அசையக்கூட முடியாது. எதிரிக்குக்கூட வரக்கூடாதுங்க சிக்குன் குன்யா.

நான் தங்கியிருக்கற மூணு மாடி அபார்ட்மெண்ட்ல லிஃப்ட் வசதி கிடையாது. ஒவ்வொரு முறையும் டாக்டரைப் பார்க்கறதுக்கு மூணு மாடி ஏறி இறங்கணும். கை, கால் அசைக்க முடியாம இருக்கற நேரத்துல மூணு மாடி ஏறி இறங்குற மாதிரி கொடுமை வேறெதுவும் கிடையாது. ஒவ்வொரு படியிலயும் தவழ்ந்து, உருண்டு இறங்கறதுக்குக் குறைஞ்சது அரைமணி நேரமாகும்.

இந்தச் சோதனையைக் கடந்து டாக்டரை பார்க்கப் போனா 'சிக்குன் குன்யாவுக்கு மருந்து இன்னும் கண்டுபிடிக்கலியே'ன்னு குண்டைத் தூக்கிப் போட்டாங்க. ரெண்டு வாரம் அவஸ்தைப்பட்டு கொஞ்சம் கொஞ்சமா சரியாச்சு. ஆனாலும் ஒரு மாசத்துக்குக் கால்வலி இருந்தது. வேகமா நடக்க முடியாது. சரியாகி வேலைக்குப் போனா பதினைந்து நாள் செய்ய வேண்டிய வேலை மலை மாதிரி இருந்தது. அப்ப தோணிச்சு... இதுக்கு சிக்குன் குன்யாவே பரவயில்லைன்னு."

- தீபா

படம்: சுந்தரம்

**ஹ**லோ வாசகர்களே! கடந்த வாரம் தொடங்கிய தித்திக்கும் திங்களுக்கு உங்களிடமிருந்து 'சிவாஜி' கணக்கில் வரவேற்பு. திங்கட்கிழமை (18.6.07) காலையே நிறைய தொலைபேசி அழைப்புகள். அதில் முதல் அழைப்பு **கே.கே.நகரைச் சேர்ந்த அன்பழகன்** என்பவரிடமிருந்து...

* அன்பழகன்



# சிந்திக்க வைத்த

அக்கு வேறு ஆணி வேறு என்பார்களே, அப்படி அட்டை டு அட்டை விமர்சித்துத் தள்ளிவிட்டார்.

''அட்டையில் அழகிரியைப் போட்டு மதுரையில் ஒரு சி.எம்.முன்னு தலைப்புக் கொடுத்திருக்கிறது அருமையா இருக்கு சார். சின்ன வருத்தம் என்னன்னா பின்னாடி மீனாட்சி அம்மன் கோயிலைப் போட்டிருக்கீங்க, மதுரையின் பின்னணியைக் காட்ட செய்த ஐடியான்னு புரியுது. ஓர் ஆன்மிகவாதியைப் போட்டு, அப்படி கோயிலைக் காட்டியிருந்தா ஓ.கே. இவருக்கு அப்படிச் செய்திருக்க வேண்டாமே சார்'' என்றார் ஆதங்கக் குரலில்.

பிறகு ''கல்கியை வாங்கினதும் நான் முதலில் படிக்கிறது நீங்கள் கேட்டவைதான். ஒவ்வொரு பதிலும் மழுப்பல் இல்லாமல் தைரியமாவும் தெளிவாவும் நடுநிலை மாறாமலும் இருக்கும். அடுத்து, சுஜாதாவின் வாரம் ஒரு பாசுரம். அற்புதமான விஷயங்களை அதில் தெரிஞ்சுக்க முடியுது. டாக்டரின் ஹெல்மெட் கட்டுரை, கூடங்குளம் அணுமின் நிலையம் பற்றின செய்தி, அட்மிஷன் பிரச்னை இப்படி ஒவ்வொன்றிலும் சமுதாய அக்கறை மிளிருது. சிறுகதைகள் மூன்றுமே கல்கிக்கேயுரிய தனித்தன்மையுடன் மனதைத் தொட்டன'' என்று அடுக்கி முடித்தார்.

''ரொம்ப நன்றி அன்பழகன். இந்த வாரம் 'வளம் தரும் கோயில்' கட்டுரையில் வெள்ளீஸ்வரர் கோயிலைப் பற்றிய செய்தி வந்திருக்கு. அந்தக் கோயில் எந்த ஊரில் இருக்குன்னு சொல்ல முடியுமா?'' என்று கேட்டோம்.

''மாங்காடு'' என்று சொன்னவருக்கு நன்றி கூறி விடை பெற்றோம்.

**அ**டுத்து நாம் தொடர்பு கொண்டது **கடலூரைச் சார்ந்த 'வானவில்' மூர்த்தி.** ஐம்பத்தொன்பது வயதாகும் இவர் கல்கியில் துணுக்குகள், கடிதம் உள்ளிட்ட





# தித்திக்கும் திங்கள்

நிறைய படைப்புகளை அளித்துள்ளார். மூன்று தலைமுறையாக கல்கி வாசிக்கிறார்களாம்.

''மதுரையில் ஒரு சி.எம். மிக துணிச்சலான கட்டுரை. கல்கியின் தலையங்கம் எப்போதுமே சிறப்பாக இருக்கும். நடுப்பக்கம் வெளியான 'காக்கைகள்' கவிதை மிகவும் அருமை. திருமண வீடு, கருமாதி வீடுன்னு வருகிற கடைசி வரிகள் எனக்குள்ளே எத்தனையோ சிந்தனைகளை ஏற்படுத்திவிட்டது'' என்றார்.

அவரிடமும் வெள்ளீஸ்வரர் கேள்வியைக் கேட்டோம். புத்தகத்தைப் புரட்டும் சத்தம். சில நொடிகளில் பதிலைச் சொன்னார். இவர்களுக்கு அமரர் கல்கியின் புத்தகங்கள் பரிசாக அனுப்பப்படுகின்றன.

**நி**ற்க. திங்களுக்குப் பிறகு செவ்வாய் நிகழ்ச்சியைச் சொல்லியே ஆக வேண்டும். மும்பையிலிருந்து ஒரு வாசகர் பேசினார். ''தித்திக்கும் திங்கள் பகுதியைப் பார்த்தோம். சந்தோஷம்! ஆனா எங்களுக்குச் செவ்வாய் கிழமைதான் புத்தகமே கிடைக்கும். நாங்க எப்படி கலந்துக்க முடியும்? நீங்க தமிழ்நாடு

# செவ்வாய்!

அளவிலே பார்த்தா எப்படி? அப்போ நாங்க எல்லாம் கல்கி வாசகர்கள் கிடையாதா?'' என்று உரிமையுடன் கோபித்தார்.

''ஐயோ, அப்படி கிடையாது சார். நீங்களும் உங்க தொலைபேசி எண், முகவரியை எழுதியனுப்புங்க. அந்த வாரத்து கல்கியைப் பற்றி இல்லாவிட்டாலும் பொதுவான கருத்தைக் கேட்போம்'' என்றோம்.

டெல்லியிலிருந்தும் ஒரு வாசகி தொலைபேசி செய்து இதே கேள்வியைக் கேட்டார். இந்தப் பகுதியின் மூலம் எல்லா கல்கி வாசகர்களையும் தொடர்புகொள்வதே எங்கள் நோக்கம். ஆகவே நீங்கள் தாராளமாக உங்களைப் பற்றிய விவரங்களுடன், தொலைபேசி எண், புகைப்படத்தை அனுப்புங்கள். மறக்காமல் 'தித்திக்கும் திங்கள்' என்று குறிப்பிடுங்கள்.

அடுத்த வாரம் இன்னும் நிறைய பேரைச் சந்திக்கிறோம். இப்ப ரிசீவரை வெச்சுடறோம்.

டொக்!




* மூர்த்தி



# வளம் தரும் கோயில் -12

## அகஸ்தீசுவரத்துச் சனீசுவரர்

**பா**ர்வதி பரமேசுவரன் திருமண வைபவத்துக்குக் கூடிய கூட்டத்தினால் பூமியின் சமநிலை குலைந்தது. அதைச் சரிகட்ட, சிவபெருமான் அகஸ்திய முனிவரைத் தென்னாட்டுக்கு அனுப்பினார் என்று புராணங்கள் பேசுகின்றன. அவருக்கு மொழிப் பிரச்னை வரக்கூடாது என்று பெருமானே தமிழ்மொழியைக் கற்பித்து அனுப்பினாராம்! அப்படி தென்னாடு வந்த அகத்தியருக்கு நினைத்த போதெல்லாம் காட்சி கொடுக்க ஒப்புக் கொண்டாராம் பரமசிவன். இதுதான் சாக்கு என்று தாம் உலாவிய இடங்களிலெல்லாம் அகஸ்தியர் சிவனை நினைக்க, ஆங்காங்கே காட்சி கொடுத்தாராம் சிவபெருமான்! அப்படி சிவபெருமான் காட்சி தந்த இடங்களில் எல்லாம் அகஸ்தியர் சிவலிங்கம் நிறுவி அகஸ்தீஸ்வரர் என்று பெயரிட்டு, பூஜை செய்திருக்கிறார். ஒரு நாளைக்கு மூன்று வேளை சிவபூஜை செய்யும் வழக்கம் உடையவராதலால் ஏராளமான அகஸ்தீஸ்வரர்கள் தென்னாட்டில் அருள் பாலிக்கிறார்கள்! ஆகவே, அகத்தியர் இந்தப் பக்கங்களிலே நெடு நாட்கள் தங்கியிருந்திருக்கிறார் என்று யூகிக்கலாம். அத்தகைய அகஸ்தீஸ்வரர் ஒருவர் பல்லா வரம் பம்மல் வட்டாரத்தில் உள்ள பொழிச்சலூரில் அருள்பாலிக்கிறார்.

பல்லாவரம் ரயில் நிலையத்திலிருந்து ஆட்டோவில் கால் மணி நேரம் பயணம் செய்தால் அகஸ்தீஸ்வரர் கோயிலை அடையலாம். நிறைய பஸ் வசதியும் உண்டு. சாலை ஓரமாகவே இருக்கிறது கோயில்.

பெரிய அளவிலான சிவலிங்க வடிவமாக அகஸ்தீஸ்வரர் எழுந்தருளியிருக்கிறார். அகஸ்தியர் வழிபட்ட பல சிவலிங்கங்களைப் போல இவரும் சதுர வடிவமுள்ள ஆவுடையாரைக் கொண்டவர். தெற்கு பார்த்த தனிச் சன்னிதியில் ஆனந்தவல்லி என்கிற திருநாமத்துடன் நான்கு கரங்களுடன், நின்ற திருக்கோலத்தில் அம்பிகை எழுந்தருளியிருக்கிறாள்.

சுவாமி சன்னிதிக்கு எதிரே, கிழக்கு வாசலுக்கு அருகிலுள்ள மேடையில் அகஸ்தீஸ்வரரை நோக்கியவாறு சனி பகவான் எழுந்தருளியிருக்கிறார். காக்கை வாகனத்துடன் வலக் கரம் அபய ஹஸ்தமாகவும் இடக்கரம் துடையின் மீது ஊன்றியவண்ணமுமாக சனி பகவான் காட்சி தருகிறார். தம் ஆயுதம் எதையும் ஏந்தாமல், சாந்த மூர்த்தியாய் இங்கு சனிபகவான் விளங்குவதால் சனியினால் பீடிக்கப்பட்டவர்களுக்கு இவர் அபயம் அளித்து அவர்கள் படும் அவஸ்தையிலிருந்து விலக்கு அளிக்கிறார். ஏழரை நாட்டுச் சனி அஷ்டமத்துச் சனி, சனி தசை ஆகியவற்றால் துன்பப்படுபவர்கள் ஏராளமானோர், சனிக்கிழமையன்று இவரை நாடி வருகிறார்கள். அதனால் வழக்கமாக ஆள் நடமாட்டம் குறைவாக உள்ள இக்கோயில் சனிக்கிழமையன்று களை கட்டி




* திருநாகேஸ்வர ஆலயம், குன்றத்தூர்






★ அகஸ்தீஸ்வரர் ஆலயம், பொழிச்சலூர்

# சென்னையைச் சுற்றியுள்ள நவ கிரஹ தலங்கள்!

விடுகிறது. சனிப் பிரதோஷம் வந்தால் கேட்கவே வேண்டாம். சனிப் பெயர்ச்சி விழாவும் சிறப்பான வழிபாடுகளுடன் நடைபெறுகிறது. சனிக்கிழமைகளில் ஏற்றும் எள் தீபத்தின் வாசம் வாரத்தின் மற்ற நாட்களிலும் கோயிலில் நிரம்பியிருக்கிறது.

சனி பகவானே பூசித்த தலம் இது என்றும், அதனால் தொண்டைநாட்டு நவ கிரகத் தலங்களில் இது சனிபகவானுக்குரிய தலம் என்றும் பழைய சாஸனம் ஒன்று தெரிவிக்கிறதாம். கோயிலுக்கு வெளியே சாலையின் மறுபுறம் உள்ள திருக்குளம் சனி தீர்த்தம், நள்ளார் தீர்த்தம் என்ற பெயர்களுடன் இருக்கிறது. குப்பைகள் குளத்தில் சங்கமிக்க, பாசி படிந்துள்ள திருக்குளம் சனிதசை விலகக் காத்திருக்கிறது!

வாழ்வில் சுபங்களைத் தருபவரும் நீக்குபவரும் சனி பகவானே என்று நம்புகிறோம். அரசாங்கத்துடனும் ஆட்சியாளர்களுடனுமான மோதல்கள் முதல் மனைவி - குழந்தைகளுடனான தகராறு வரை யாவற்றையும் தீர்க்க வல்லவர் இந்தச் சனீசுவரர்.

### குன்றத்தூர் திருநாகேஸ்வரம் (இராகு)

குன்றத்தூரில் பிறந்து வளர்ந்த

த.கி.நீலகண்டன்

சேக்கிழார் குலோத்துங்கச் சோழனிடம் மந்திரியாகப் பணி புரிந்தார். சோழநாட்டில் வாழ்ந்திருந்த சில காலத்தில் கும்ப கோணம் அருகில் உள்ள இராகுஸ்தலமான திருநாகேஸ்வரம் ஆலயத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டார். பதவியைத் துறந்து ஓய்வு பெற்று தம் வாழ்நாளின் பிற்பகுதி யைக் கழிக்க மீண்டும் குன்றத்தூர் வந்தவர், அங்கேயும் இதேபோல் ஒரு கோயில் அமைத்து அதற்குத் திருநாகேஸ்வரம் என்று பெயரிட்டார். முதன்மந்திரி கட்டிய கோயில் அல்லவா? இன்றளவும் செல்வச் செழிப்புடன், ஒழுங்காகப் பராமரிக்கப்பட் டுச் சிறப்பாக உள்ளது குன்றத்தூர் கோயில்.

குன்றத்தூர் பேருந்து நிலையத்தை ஒட்டினாற் போலுள்ள தேரடியில் இருந்து வலப்புறம் செல்லும் சாலையில் திரும்பிய உடனே சற்றுத் தொலைவில் உள்ள கோயிலுக்கு எதிரேயே விரிந்து பரந்த திருக்குளம், கண்ணுக்கு விருந்து.

உள் பிராகாராத்தை அடைகிறோம். வலப்புறம் அம்பிகை சன்னிதி. நான்கு திருக்கரங்களுடன் பாசம் அங்குசம் ஏந்தி அபய வரத முத்திரையுடன் தெற்கு நோக்கி எழுந்தருளியிருக்கிற அம்பிகையின் திரு நாமம் காமாக்ஷி! காஞ்சிபுரம் வட்டாரம் முழுவதும் அவளுடைய ஆளுகையே அல் லவா? எங்கே வந்தாலும் அங்கு நானிருப் பேன் என்று ஒரு குறுஞ்சிரிப்புடன் அம் பிகை நம்மை வரவேற்கிறாள். பழக்க மில்லாத இடத்தில் பரிச்சயமான முகத் தைப் பார்த்ததும் ஏற்படும் ஒரு நிறைவு அவள் சன்னிதியில் நமக்குக் கிடைக்கிறது. அடுத்து சுவாமி சன்னிதியில் நுழைகை யில் அது நமக்கே சொந்தமான இடமாகத் தோன்றுகிறது.

கருவறையின் உள்ளே நாகேஸ்வரர் கிழக்கு நோக்கி எழுந்தருளியிருக்கிறார். சரவிளக்குகளின் ஒளியில் சிவலிங்கத் திருமேனி பொலிவுடன் விளங்குகிறது. சன்னிதியில் எந்நேரமும் பக்தர்களின் நடமாட்டம் இருந்தாலும், அமைதிக்குப் பங்கமில்லை.

கருவறையின் வெளிச்சுவர் முழுவதும் சரித்திரச் சான்றுகள். வெளிப்பிராகாரத்தில் நவ கிரகங்களும், தனிச் சன்னிதியில் சனீஸ்வர பகவானும் குடி கொண்டுள்ள னர். இராகு காலத்தில் எலுமிச்சம் பழத்தில் நெய் விளக்கு ஏற்றுவதற்கென்றே ஒரு தனி மண்டபம் அமைக்கப்பட்டிருக்கிறது. விசேஷ நாட்களிலும், பிரதோஷ நாட்களி லும் ஏராளமான பக்தர்கள் திரளுவதை யூகிக்க முடிகிறது. கோயில் பராமரிப்பில் பலரும் ஈடுபட்டு ஒட்டடை அடிப்பது, பெருக்குவது, சுத்தம் செய்வது என்று சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருப் பதைப் பார்த்து மனம் நிறைவடைகிறது.

ராகு தோஷம் நீங்கப் பெற்றால் இல் லற தோஷமும் நீங்கும். மன நோய்கள், புகழ் வீழ்ச்சி போன்றவற்றிலிருந்து



● சனி

மீட்பவர் ராகு பகவான்.

### கெருகம்பாக்கத்துக் கேது!

**ந**வ கிரகங்களில், கடைசியாக வைத்து எண்ணப்படுவது கேது கிரகம். ஞானத்தை அருள்பவன் கேது. இந்த கிரகத்தின் அதிதேவதை மகாகணபதி. எந்தக் காரியத்தைத் தொடங்கினாலும் முழு முதற் பொருளான கணபதிக்கே முதலிடம் எனவே நவ கிரக பூஜை, ஹோமம் போன்றவற்றைச் செய்யும் போது, முதலில் கேதுவை வைத்து ஆவாகனம் செய்வது ஒருவித மரபு.

சென்னையை அடுத்துள்ள போரூரில் இருந்து குன்றத்தூர் செல்லும் சாலையில் சுமார் ஐந்து கி.மீ. பயணம் செய்தால் இடப் புறம் ஒரு சாலை பிரிகிறது. அதில் திரும்பி சுமார் 1 கி.மீ. பயணம் செய்தால் கெருகம்பாக்கம் கிராமத்தை அடையலாம்.

நவ கிரகங்களில் கேதுவின் அருள் விளங்குவதால் கிரகம்பாக்கம் என்ற பெயரே பின்னாளில் கெருகம்பாக்கம் என்று மருவியதோ என்று எண்ணத் தோன்றுகிறது. இத் தலத்திலுள்ள ஆலயம் மிகப் பழைமை வாய்ந்தது. சிறிய ஆலயம்தான் என்றாலும், விமானமோ கோபுரமோ, எந்த அடையாளமும் இன்றி, அமைதியாக விளங்கு கிறது. சுவாமியின் பெயர் நீலகண்டேசுவரர். அம்பிகை ஆதி காமாக்ஷி. ஆலயத்துள் நுழையும்போதே கம்பீரமான தோற்றத்துடன் நம்மை எதிர் கொண்டழைக்கிறாள் அன்னை ஆதி காமாக்ஷி. திருவுருவம் சுமார் ஐந்தரை அடி உயரம். சாந்தமும் அமைதியும் தவ ழும் திருமுகத்தைப் பார்த் துக்கொண்டே இருக்கலாம். விளக்கின் சுடர் ஒளியில் அம்பிகையின் திருவிழிகள் நம்மைக் கருணையுடன், கண் இமைக்காமல் பார்த்துக்கொண் டிருப்பது போல் ஒரு தோற்றம் ஏற்படுகிறது. சிறிய கருவறை ஆதலால், அம்பிகையை மிக அருகில் தரிசிக்கும் பாக்கியம் கிட்டுகிறது.

கிழக்கு நோக்கிய வண் ணம் சுவாமி நீலகண்டேசு வரர் அருள்பாலிக்கிறார். தேவாசுரர்கள் பாற்கட லைக் கடையும்போது முதலில் உண்டான ஆல கால விஷத்தை விழுங் கித் தம் கண்டத்தில் நிறுத்திக் கொண்டு


* ராகு


* கேது



* நாகேஸ்வர ஸ்தலத்தின் உட்புறத் தோற்றம்

இந்த புவனத்தைக் காத்தவர் நீல கண்டேசுவரர். பிறகு உண்டான அமுதத்தை, தேவர்கள் வடிவில் ஒளிந்திருந்து உண்டு அமரத்துவம் பெற்றவர்கள் அல்லவா - இராகுவும் கேதுவும்?

நஞ்சுண்ட கண்டர் அமர்ந்து அருள்பாலிக்கும் இத் தலத்தில் மீண்டும் அமுதம் பெறலாம் என்று இங்கு வந்து ஒளிந்திருக்கிறார் கேதுபகவான்! ஆலயத்தின் மகாமண்டபத்தின் மேல் விதானத்தில் சந்திரனை விழுங்கும் பாம்பின் உருவில் கேது பகவான் விளங்குகிறார். நாக பிரதிஷ்டைக்குத் தனிச் சன்னிதியும் இந்த ஆலய நுழை வாயிலுக்கருகில் உள்ளது.

ஆலயத்தின் வடக்கே, பின்புறம் உள்ள குளக் கரையில் நவ கிரகங்களும் விளங்குகிறார்கள். 'மூக்கும் முழியுமாக' உள்ள இந்த மாதிரியான நவ கிரகங்களைக் காண்பது அபூர்வம்.

விநாயகர் இங்கே சுயம்பு மூர்த்திக்கு உரிய அமைப்புடன், 'கிரக சங்கட தோஷ நிவர்த்தி விநாயகராக' அருள்பாலிக்கிறார். இவ்வாலயத்தின் பழைமைக்கு அவரே சாட்சி!

பெரும்பாலும் பூட்டியே கிடந்த இவ்வாலயம் தற்போது பிரதோஷம் மற்றும் விசேஷ நாட்களில் களைகட்டி விடுகிறது. ஆர்வமுள்ள சில பக்தர்களே இதற்குக் காரணம்! மகா மண்டபத்தில் இருக்கும் சிறிய அழகிய நந்திதேவருக்குச் சிறப்பான அபிஷேக ஆராதனைகள் நடக்கின்றன.

கால சர்ப்பதோஷம் நீக்கி, கிரகங்களால் ஏற்படும் சங்கடங்களை விலக்கி, தம்மை அண்டியவருக்கு நல்வாழ்வு தரும் நீல கண்டேசுவரரையும் காமாக்ஷி அம்பிகையையும் வணங்குவோம். ஞானமும், வியாபார அபிவிருத்தியும் தந்து, வீடு - மனை வாங்கும் விஷயங்களில் ஆதரவு நிலை ஏற்படுத்தி, விஷக்கடி நிவாரணத்துக்கும் முறிவுக்கும் அருளும் கேதுவின் தலம் கெருகம்பாக்கம் என்பதையும் நினைத்து வழிபடுவோம்.

படங்கள் : **பொள்ளாச்சி சுந்தரம்**

இக்கட்டுரைத் தொடரில் இடம் பெற்ற நவ கிரகத் தலங்கள் இந்து அற நிலையத் துறையினரால் அடையாளம் பொருத்தப்பட்டவை. தமிழகச் சுற்றுலா வளர்ச்சிக் கழகம் இந்தத் தலங்களுக்கு ஒரே பயணமாகச் சென்று வரும்படி ரூ.150/- கட்டணத்தில் சுற்றுலாத் திட்டம் ஒன்றைத் துவக்கியுள்ளது.

* கேது ஸ்தலம், கெருகம்பாக்கம்



# பந்தா பார்வதி!

ச. பிரசன்னா

அரிசி மில் முதலாளி கஜேந்திரனுக்கு, அவன் மனைவி பார்வதியின் நடவடிக்கையில் சிறிதும் சம்மதமில்லை. ஆத்திரம்தான் அதிகமாகியது. நடப்பதோ அவர்கள் வீட்டு வேலைக்காரியின் மகள் திருமணம். அவர்களுடைய வசதிக்கேற்ப எளிமையாகத்தான் நடத்துகிறார்கள். அதில் போயா இப்படி ஆடம்பரம் காட்டுவாள்....? பட்டுப்புடவை என்ன...? மேக்கப் என்ன? கண்ணைக் கவரும் வைர, தங்க நகைகள் என்ன...? பகட்டாய்த் திருமணத்துக்கு வந்திருந்தாள். பார்ப்பவர்கள் என்ன நினைப்பார்கள்! அவர்கள் வீட்டு வேலைக்காரியும் எவ்வளவு வருத்தப்படுவாள்! கவலையில் குமைந்தார் கஜேந்திரன்.

திருமணமும் நன்றாய் நடைபெற்றது. நல்லபடி உபசரித்தவர்களிடம் இருந்து தன்மையாய் விடை பெற்றுக் கொண்டனர் கஜேந்திரன் தம்பதி.

திரும்பும் வழியில் ''ஆடம்பரம் காண்பித்ததில் இப்ப சந்தோஷமா உனக்கு...?'' என வள்ளென எரிந்து விழுந்தார்.

அமைதியாய் அவரைப் பார்த்த பார்வதி, ''எல்லாம் காரணமாகத் தாங்க. நான் ஒண்ணும் அங்க பந்தா காமிக்கலை. 'அட! இவ்ளோ வசதியானவங்களும் பணக்காரங்களும் சம்பந்தியை மதிச்சுக் கல்யாணத்துக்கு வந்திருக்காங்களே'ன்னு நம்ம வீட்டு வேலைக்காரியை உயர்வா நினைப்பாங்க. அவ பெண்ணையும் நல்லபடி நடத்துவாங்க. வசதியானவங்க இடத்துக்கு எளிமையாப் போகணும். ஏழை வீட்டு விசேஷம்னா 'பளீர்'னுதான் போகணும். ஏன்னா ஆடம்பரமும் சில நேரங்கள்ல உதவி செய்யும்'' என்றபடி நிமிர்ந்து நடந்தாள். ○






# செய்திகள் வாசிப்பது தமிழ்நாடு!

கருத்து : யுவா    படம் : பிள்ளை
















Rs. 39,381/- 0% EMI Rs. 3282/-

Rs. 35,336/- 0% EMI Rs. 2945/-

Rs. 25,297/- 0% EMI Rs. 2108/-

**WEDDING SET**

Rs. 87,400/- Rs. 49,990/- only



1) 21" Flat CTV
2) LG Fridge
3) LG Washing Machine
4) Prestige Gas Stove
5) Havells Ceiling Fan
6) Lakshmi Grinder
7) Kenstar Mixi
8) Teak Wood Dinning Table
9) Sofa Set
10) Steel Cupboard
11) Dressing Table
12) Teak Wood Cot
13) 22 Nos. Bronze Vessels
14) 67 Nos. Steel Vessels



Rs. 1,950/-

Rs. 6,990/-

Shriram City Finance Ltd. 0% Interest - Easy Finance



with cusion

Rs. 7,990/-
0% EMI Rs. 666/-

Rs. 12,990/-
0% EMI Rs. 1083/-

Get upto Rs. 5,000/-* Easy Xchange on Old Furniture



Rs. 5,990/-

Rs. 6,240/-

Rs. 2,290/-

Size: 6¼ x 5 - Rs. 3,625/-





Rs. 960 onwards





1.5 Split - Rs. 21,590/-
0% EMI Rs. 1,799/-



Stabilizer Free

1.5 Window - Rs. 15,990/-
0% EMI Rs. 1,332/-



**Buy Now and Save upto 5% - 25%***




**TEXTILES - READYMADES - KIDS WEAR - GIFTS & TOYS - COSMETICS**
**FOOT WEAR - TRAVEL BAGS - VESSELS - HOME APPLIANCES - FURNITURES**

No charges on Credit / Debit cards - Shop open on all days - Ample Car Parking - Everyday Low Price

# SRI SANKAR PANDIAN STORES

84/85, Usman Road, T.Nagar, Chennai-17. (Near Bus Terminus)

Ph: 044-24322977

* Conditions Apply * Offer Valid for Selected Models only

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08 Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08 Registered as a Newspaper in Srilanka. Supplement to the Kalki Issue Dated 4.3.2007